# குர்ஆன் ஹதீஸ் ஒளியில்
# மண்ணறை வாழ்கை



NOT FOR SALE

الحياة البرزخية
باللغة التاميلية

المسابقة الثقافية
الرمضانية للجاليات

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# குர்ஆன் - ஹதீஸ் ஒளியில் மண்ணறை வாழ்க்கை

S. அப்பாஸ் அலீ M.I.Sc.

# புத்தக விபரக் குறிப்பு


| | |
|---|---|
| நூல் பெயர் | : குர்ஆன் - ஹதீஸ் ஒளியில் மண்ணறை வாழ்க்கை |
| ஆசிரியர் | : S. அப்பாஸ் அலீ M.I.Sc. |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : ஐந்தாம் பதிப்பு ஜனவரி 2012 |
| பதிப்புரிமை | : ஆசிரியருக்கே! |
| பக்கங்கள் | : 72 |
| படிகள் | : 2000 |
| ஒளி அச்சுக்கோர்வை | : சன் கிராபிக்ஸ் சென்னை - 1. |
| அச்சிட்டோர் | : சன் பிரிண்டிங் ஏஜென்ஸி செல் : 94438 79861 |
| வெளியீடு | : சன் பப்ளிகேஷன்ஸ் தொண்டி - 623 409. |
| மொத்த விற்பனையாளர் | : மூன் பப்ளிகேஷன்ஸ் 83/3, மூர் தெரு, முதல் மாடி, மண்ணடி, சென்னை – 600 001. போன் : 65690810 |

**விலை : ரூ. 14.00**

# முன்னுரை

நாம் வாழ்ந்து கொண்டிருக்கும் உலக வாழ்க்கை பல கவர்ச்சி கரமான அம்சங்களை உள்ளடக்கி இருக்கிறது. நிலையில்லாத உலக வாழ்க்கையின் இன்பத்தில் மூழ்கி நிலையான மறுமை வாழ்க்கையை பலர் மறந்து விடுகிறார்கள். இதனால் அவர்கள் நன்மையான காரியங்களை விட்டு விலகிச் செல்வதோடு தீமையின்பால் விரைந்து கொண்டிருக்கிறார்கள்.

நல்லவர்களாக வாழ நினைப்பவர்களும் தீமைகளை அதிகம் செய்து கொண்டிருக்கிறார்கள். இறையச்சத்தை நினைவூட்டும் காரியங்களை அறிந்து கொள்ளாததால் இத்தகைய நிலை இவர்களிடத்தில் நீடிக்கிறது.

தடம் புரண்டுவிடாமல் வெற்றிக்கான வழியில் தொடர்ந்து செல்ல வேண்டும் என்று ஆசைப்படுபவர்கள் மரணத்தையும் அதற்குப் பின்னால் இருக்கின்ற வாழ்க்கையையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

**அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (தவறான) ஆசைகளைத் தகர்க்கக் கூடிய மரணத்தை அதிகமாக நினைவு கூறுங்கள்.**

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : திர்மிதி (2229)

**அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என் கையைப் பிடித்துக் கொண்டு "இந்த உலகத்தில் நீ ஒரு பயணியைப் போன்று வாழ். அல்லது வழிப்போக்கனைப் போல் வாழ். மண்ணறைக்குள் சென்று விட்டவர்களில் ஒருவனாக உன்னை நீ கருதிக்கொள்" என்று கூறினார்கள்.**

அறிவிப்பவர் : இப்னு உமர் (ரலி)
நூல் : முஃஜம் இப்னில் அஃராபி

அல்லாஹ்வின் வேதனைக்கு அஞ்சுவது அவசியமென்றும் வேதனைக்கு அஞ்சுவது நல்லவர்களின் பண்பாக இருக்க வேண்டும் என்றும் அல்லாஹ் கூறுகிறான்.

**அவர்கள் தமது இறைவனின் வேதனைக்கு அஞ்சுவார் கள். அவர்களின் இறைவனின் வேதனை அச்சப்படத்தக்கதே.**

அல்குர்ஆன் (70 : 27)

**இவர்கள் யாரிடம் பிரார்த்திக்கிறார்களோ அவர்களில் (இறைவனுக்கு) மிகவும் நெருக்கமானவர்களே தமது இறைவனை நோக்கி வஸீலாவைத் தேடுகின்றனர். அவனது அருளை எதிர்பார்க்கின்றனர். அவனது வேதனைக்கு அஞ்சுகின்றனர். உமது இறைவனின் வேதனை அச்சப்பட வேண்டியதாகும்.**

அல்குர்ஆன் (17 : 57)

மண்ணறையில் நடக்கின்ற நிகழ்வுகளை நபி (ஸல்) அவர்கள் நமக்குத் தெளிவுபடுத்தியுள்ளார்கள். இவற்றை நாம் தெரிந்து கொண்டால் இறைவனுடைய பயம் கண்டிப்பாக நமக்கு ஏற்படும்.

மண்ணறை வாழ்வில் தீயவர்களின் நிலையையும் குர்ஆன் ஹதீஸ் அடிப்படையில் விளக்கி மக்களை சீர்படுத்துவதே இந்நூலின் நோக்கம்.

S. அப்பாஸ் அலீ M.I.Sc.

# பொருளடக்கம்

# மண்ணறை வாழ்க்கை உண்மையானது

மண்ணறை வாழ்க்கை என்பது கிடையாது என்று சிலர் நினைக்கிறார்கள். மண்ணறை வாழ்க்கை உண்டு என்று இறைவனும், இறைத்தூதர் (ஸல்) அவர்களும் உறுதிபடுத்தியுள்ளார்கள்.

ஃபிர்அவ்னின் ஆட்களை தீய வேதனை சூழ்ந்து கொண்டது. காலையிலும், மாலையிலும் நரக நெருப்பில் அவர்கள் காட்டப்படுவார்கள். அந்த நேரம் வரும் போது ஃபிர்அவ்னின் ஆட்களைக் கடுமையான வேதனையில் நுழையச் செய்யுங்கள்! (எனக் கூறப்படும்)

அல்குர்ஆன் (40 : 45)

ஃபிர்அவ்னின் கூட்டத்தினர் தினமும் காலையிலும், மாலையிலும் நரக நெருப்பில் காட்டப்படுகிறார்கள் என்பது மறுமையில் வழங்கப்படும் தண்டனைக்கு முன் வேறொரு தண்டனை உள்ளது என்பதை நிரூபிக்கிறது. ஏனென்றால் இவ்வசனத்தில் (40:46) யுக முடிவு நாளில் இவர்களை கடும் தண்டனைக்கு கொண்டு செல்லுங்கள் என்று கூறப்படுகிறது. இது தான் கப்ரின் வேதனை என்று நபி மொழிகள் கூறுகின்றன.

மதீனா யூத மூதாட்டிகளில் இருவர் என்னிடம் வந்து (பேசிக் கொண்டிருந்த போது) ''மண்ணறைவாசிகள் மண்ணறையில் வேதனை செய்யப்படுகிறார்கள்'' என்று கூறினர். அவர்கள் இருவரும் கூறியதை நான் நம்ப மறுத்தேன். அவர்கள் கூறியதை நம்புவது எனக்கு சரியாகப்படவில்லை. பிறகு அவர்கள் இருவரும் வெளியேறிவிட்டனர். நபி (ஸல்) அவர்கள் என்னிடம் வந்தார்கள். அப்போது நான், ''அல்லாஹ்வின் தூதரே! இரு மூதாட்டிகள் (என்னிடம் வந்து இப்படி இப்படி சொன்னார்கள்'') என்று அவர்களிடம் தெரிவித்தேன்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள், "இருவரும் உண்மையே சொன்னார்கள். (மண்ணறையிலிருக்கும் பாவிகள்) கடுமையாக வேதனை செய்யப்படுகிறார்கள். அந்த வேதனை(யால் அவதியுறும் அவர்களின் அலறல்)களை எல்லா மிருகங்களும் செவியேற்கின்றன" என்று சொன்னார்கள். அதற்குப் பின் நபி (ஸல்) அவர்கள் எல்லாத் தொழுகைகளிலும் மண்ணறையின் வேதனையிலிருந்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோராமல் இருந்ததில்லை.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : புகாரி (6366)

## மறுமையை நினைவூட்டும் மண்ணறை

மண்ணறைகள் இறையச்சத்தையும், மறுமை வாழ்வையும் நினைவூட்டக்கூடியவை என்பதால் மண்ணறைகளுக்குச் சென்று பார்த்து வருமாறு நபி (ஸல்) அவர்கள் நமக்குக் கட்டளையிட்டுள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : அடக்கத் தலங்களை சந்தியுங்கள். ஏனெனில் அவை மரணத்தை நினைவூட்டும்!

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : முஸ்லிம் (1777)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மண்ணறைகளைச் சந்தியுங்கள். ஏனென்றால் அவை மறுமையை நினைவூட்டுகிறது.

அறிவிப்பவர் : புரைதா (ரலி)

நூல் : திர்மிதி (974)

ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் உரையாற்றும்போது, "அடக்கஸ்தலத்தில் மனிதன் அனுபவிக்கும் சோதனையைப் பற்றி கூறினார்கள். அவ்வாறு கூறிக் கொண்டிருக்கும் போது முஸ்லிம்கள் (அச்சத்தால்) பதறிவிட்டார்கள்.

அறிவிப்பவர் : அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி)

நூல் : புகாரி (1373)

# பிரதிபலன் கிடைக்கும் இடம்

உலகில் நாம் செய்கின்ற நன்மைகளுக்கு முழுமையான பரிசும் தீமைகளுக்கு முழுமையான தண்டனையும் மறுமையில்தான் கிடைக்கவிருக்கிறது. மண்ணறை, மறுமை வாழ்வின் முதல் நிலை என்பதால் நல்லவர்களுக்கான பரிசும், தீயவர்களுக்கான தண்டனையும் இங்கிருந்து தான் ஆரம்பமாகிறது.

இறந்தவர்கள் தாங்கள் செய்த செயல்களுக்கான கூலியை மண்ணறை வாழ்வில் பெற்றுக் கொண்டிருப்பதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இறந்தோரை ஏசாதீர்தகள்! ஏனெனில் அவர்கள் தாம் முற்படுத்தியவைகளின்பால் சென்று சேர்ந்து விட்டார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : புகாரி (1393)

# மண்ணறையின் நிலையே மறுமையின் நிலை

மண்ணறை வாழ்க்கை நல்லதாக அமைந்து விட்டால் மறுமை வாழ்க்கையும் நன்றாகவே அமைந்து விடும். ஆனால் மண்ணறை வாழ்க்கை சோகத்திற்குரியதாகவும், வேதனைக்குரியதாகவும் அமைந்து விட்டால் மறுமை வாழ்க்கை அதை விட வேதனைக்குரிய தாக அமைந்து விடும். எனவே சந்தோஷமான மண்ணறை வாழ்வைப் பெறுவதற்கு நாம் முயற்சி செய்ய வேண்டும்.

உஸ்மான் (ரலி) அவர்கள் மண்ணறைக்கு அருகில் நின்றால் தாடி நனைகின்ற அளவு அழுவார்கள். "சொர்க்கம், நரகத்தைப் பற்றி கூறப்படும் போது தாங்கள் அழுவதில்லை. ஆனால் மண்ணறையைப் பார்த்தால் அழுகிறீர்களே ஏன்?" என்று அவர்களிடத்தில் வினவப்பட்டது. அதற்கு அவர்கள் கூறினார்கள். மண்ணறைதான் மறுமையின் நிலைகளில்

முதல் நிலையாகும். இதில் ஒருவன் வென்று விட்டால் இதற்குப் பின் உள்ள நிலை இதை விட இலகுவானதாக இருக்கும். இதில் ஒருவன் வெற்றி பெறாவிட்டால் இதற்குப் பின் உள்ள நிலைமை இதைவிடக் கடுமையானதாக இருக்கும். நான் கண்ட காட்சிகளிலேயே மண்ணறைதான் மிகக் கோரமாக இருந்தது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள். (''எனவே தான் மண்ணறையைப் பார்த்தால் அழுகிறேன்'' என்று உஸ்மான் (ரலி) அவர்கள் கூறினார்கள்.)

அறிவிப்பவர் : ஹானிஃ (ரஹ்)
நூல் : திர்மிதி (2230)

எனவே உடம்பில் உயிர் இருக்கும் போதே நன்மைகளைச் செய்து கொள்ள வேண்டும். இறந்த பிறகு நமக்காக யார் அழுதாலும், கவலைப்பட்டாலும் அதனால் எந்தப் பயனும் இல்லை.

யூதப் பெண்ணொருத்தி இறந்ததற்காக அவளது குடும்பத்தார் அழுது கொண்டிருப்பதைப் பார்த்த போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். இப்பெண் இறந்ததற்காக இவர்கள் அழுது கொண்டிருக்கிறார்கள். அவளோ அடக்கக் குழி(கப்று)க்குள் வேதனை செய்யப்படுகிறாள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)
நூல் : புகாரி (1289)

## உயிர்களைக் கைப்பற்றும் வானவர்கள்

முஸ்லிம் சமுதாயத்தில் பரவலாக ஒரு நம்பிக்கை இருக்கிறது. மனிதர்களின் உயிர்களைக் கைப்பற்றிட 'இஸ்ராயில்' என்ற வானவரை அல்லாஹ் நியமித்திருக்கிறான். அவர்தான் உயிர்களைக் கைப்பற்றுகின்ற வானவர் என்று பரவலாக நம்புகின்றனர்.

ஆனால் 'இஸ்ராயீல்' என்ற பெயரில் வானவர் இருக்கிறார் என்று திருக்குர்ஆனிலோ, நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் போதனைகளிலோ எந்தக் குறிப்பும் இல்லை. இதற்குச் சான்றும் இல்லை. ஒரே ஒரு வானவர் தான் அத்தனை பேருடைய உயிரையும் கைப்பற்றுகிறார் என்று கூறுவதற்கும் எந்த சான்றும் இல்லை.

திருக்குர்ஆனை நாம் ஆய்வு செய்து பார்த்தால் ஒவ்வொரு மனிதனுக்கும் அவனது உயிரைக் கைப்பற்றுவதற்கு வானவர்கள் இருப்பதாகப் பின்வரும் வசனம் கூறுகிறது.

''உங்களுக்கென நியமிக்கப்பட்ட மரணத்திற்குரிய வானவர் உங்களைக் கைப்பற்றுவார். பின்னர் உங்கள் இறைவனிடம் திரும்பக் கொண்டு வரப்படுவீர்கள்'' என்று கூறுவீராக!

அல்குர்ஆன் (32 : 11)

உயிர்களைக் கைப்பற்ற வானவர்கள் வருவார்கள் என்று பன்மையாகத்தான் திருக்குர்ஆன் கூறுகிறது. இதிலிருந்து உயிர்களைக் கைப்பற்றுவதற்கு ஒருவர் இருக்க முடியாது என்று தெளிவாகிறது.

தமக்குத்தாமே தீங்கு இழைத்துக் கொண்டோரின் உயிர்களை வானவர்கள் கைப்பற்றும் போது, ''நீங்கள் எந்த நிலையில் இருந்தீர்கள்?'' என்று கேட்பார்கள். ''நாங்கள் பூமியில் பலவீனர்களாக இருந்தோம்'' என்று அவர்கள் கூறு வார்கள். ''அல்லாஹ்வின் பூமி விசாலமானதாக இல்லையா? அதில் நீங்கள் ஹிஜ்ரத் செய்திருக்கக் கூடாதா?'' என்று கேட்பார்கள். அவர்கள் தங்குமிடம் நரகம். அது கெட்ட தங்குமிடமாகும்.

அல்குர்ஆன் (4 : 97)

தமக்குத்தாமே தீங்கு இழைத்தோரை வானவர்கள் கைப்பற்றும் போது, ''நாங்கள் எந்தக் கேடும் செய்யவில்லை'' என்று அவர்கள் சமாதானம் பேசுவார்கள். அவ்வாறில்லை! நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றை அல்லாஹ் அறிந்த வன். ''நரகத்தின் வாசல்கள் வழியாக நுழையுங்கள்! அதில் நிரந்தரமாகத் தங்குவீர்கள்'' (என்று கூறப்படும்) பெருமை யடித்தோரின் தங்குமிடம் மிகவும் கெட்டது.

அல்குர்ஆன் (16 : 28)

அவர்களின் முகங்களிலும், பின்புறத்திலும் அடித்து வானவர்கள் அவர்களைக் கைப்பற்றும்போது எப்படி இருக்கும்?

அல்குர்ஆன் (47 : 27)

நம்முடைய தூதர்கள் அவர்களின் உயிர்களைக் கைப்பற்றுவார்கள் என்று வானவர்கள் குறித்து பின்வரும் வசனங்களிலும் காணலாம்.

"அல்லாஹ்வை விட்டுவிட்டு நீங்கள் யாரை அழைத்துக் கொண்டிருந்தீர்களோ அவர்கள் எங்கே?" என்று நமது தூதர்கள் அவர்ககளைக் கைப்பற்ற அவர்களிடம் வரும்போது கேட்பார் கள். "அவர்கள் எங்களைவிட்டும் மறைந்து விட்டனர்" என அவர்கள் கூறுவார்கள்.

அல்குர்ஆன் (7 : 37)

அவனே தனது அடியார்கள் மீது ஆதிக்கம் செலுத்து பவன். உங்களுக்குப் பாதுகாவலர்களை அவன் அனுப்பு கிறான். எனவே உங்களில் ஒருவருக்கு மரணம் ஏற்படும் போது நமது தூதர்கள் அவரைக் கைப்பற்றுகிறார்கள். அவர்கள் (அப்பணியில்) குறைவைக்க மாட்டார்கள்.

அல்குர்ஆன் (6 : 61)

உயிர்களைக் கைப்பற்றுவதற்கு ஒரே ஒரு வானவர் இருக்கி றார் என்ற நம்பிக்கை தவறானது என்பதை மேலே கண்ட வசனங்கள் பறைசாற்றுகின்றன. ஒவ்வொரு மனிதருக்கும் அவரது உயிரைக் கைப்பற்றுவதற்காக ஒரு வான்வரை அல்லாஹ் நியமித்திருக்கிறான். எப்போது கைப்பற்ற வேண்டும் என்ற உத்தரவு வருகிறதோ, அந்த உத்தரவுக்காக ஒவ்வொரு வினாடி நேரமும் அவர் காத்துக் கொண்டிருக்கிறார் என்பது தான் குர்ஆனிலிருந்தும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் விளக்கவுரையிலிருந்தும் கிடைக்கின்ற முடிவாகும்.

ஒரு வானவர் உலகத்திலுள்ள அத்தனை பேருடைய உயிர்களையும் கைப்பற்றும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கின்றார் என்று சொல்லப்படுவதற்கு மார்க்கத்தில் எந்தச் சான்றும் இல்லை.

# தீயவர்களின் மண்ணறை வாழ்க்கை வேதனையின் ஆரம்பம்

தீயவர்களின் உயிர் வாங்கப்படும் போதே அவர்களுக்கு வேதனை ஆரம்பமாகி விடுகின்றது. இறைநிராகரிப்பாளர்களின் உயிர் வாங்கப்படும் போது அவர்களுக்குக் கொடுக்கப்படும் வேதனையைப் பற்றி பின்வரும் வசனம் தெளிவுபடுத்துகிறது.

(ஏக இறைவனை) மறுப்போரின் முகங்களிலும், முதுகு களிலும் வானவர்கள் அடித்து அவர்களைக் கைப்பற்றும் போது "சுட்டெரிக்கும் வேதனையை அனுபவியுங்கள்!" என்று கூறுவதை நீர் பார்க்க வேண்டுமே!

அல்குர்ஆன் (8 : 50)

அவர்களின் முகங்களிலும், பின்புறத்திலும் அடித்து வானவர்கள் அவர்களைக் கைப்பற்றும் போது எப்படி இருக் கும்? அல்லாஹ்வுக்கு கோபத்தை ஏற்படுத்தக் கூடியதை அவர்கள் பின்பற்றியதும், அவனது திருப்தியை வெறுத்த துமே இதற்குக் காரணம். எனவே அவர்களின் செயல்களை அவன் அழித்து விட்டான்.

அல்குர்ஆன் (47 : 27)

# காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ள வேண்டும்

மலக்குகள் உயிரை வாங்கும்போது நாம் நல்லவனாக வாழ்ந் திருக்கக் கூடாதா? என்ற எண்ணம் கெட்டவனுக்கு ஏற்படுகிறது. அப்போது தான் ஒவ்வொரு பாவியும் தான் செய்த பாவங்களை நினைத்து வருத்தப்படுவான். நன்மையை செய்வதற்கு இன்னும் சிறிது காலம் அவகாசம் அளிக்குமாறு அல்லாஹ்விடம் வேண்டு வான். ஆனால் அவனுக்கு அதற்கான வாய்ப்பு கிடைக்காது.

எனவே மரணம் சம்பவிப்பதற்கு முன்பே மறுமை வாழ்வுக்குத் தேவையான நற்காரியங்களை அதிகமாகச் செய்து கொள்ள வேண்டும். இல்லையென்றால் இறந்த பிறகு இறைவனிடம் மன்றாட வேண்டி வரும். அப்போது எவ்வளவு மன்றாடினாலும் அதற்கு எந்தப் பயனும் இல்லை.

உங்களுக்கு மரணம் வருவதற்கு முன் நாம் உங்களுக்கு வழங்கியவற்றிலிருந்து (நல்வழியில்) செலவிடுங்கள்! "இறைவா! குறைந்த காலம்வரை எனக்கு நீ அவகாசம் அளித்திருக்கக் கூடாதா? தர்மம் செய்து நல்லவனாக ஆகியிருப்பேனே" என்று அப்போது (மனிதன்) கூறுவான். அதற்குரிய தவணை வந்து விட்டால் எவருக்கும் அல்லாஹ் அவகாசம் அளிக்க மாட்டான். நீங்கள் செய்வதை அல்லாஹ் நன்கறிந்தவன்.

அல்குர்ஆன் (63 : 10)

முடிவில் அவர்களில் யாருக்கேனும் மரணம் வரும்போது "என் இறைவா! நான் விட்டு வந்ததில் நல்லறம் செய்வதற்காக என்னைத் திருப்பி அனுப்புங்கள்!" என்று கூறுவான். அவ்வாறில்லை! இது (வாய்) வார்த்தை தான். அவன் அதைக் கூறுகிறான். அவர்கள் உயிர்ப்பிக்கப்படும் நாள்வரை அவர்களுக்குப் பின்னால் திரை உள்ளது.

அல்குர்ஆன் (23 : 100)

## பாவமன்னிப்பின் வாசல் அடைக்கப்படும்

மலக்குகள் உயிரை கைப்பற்றுவதற்காக வருவதற்கு முன்பே தாம் செய்த பாவங்களுக்கு இறைவனிடம் பாவமன்னிப்புத் தேடிக் கொள்ள வேண்டும். இறுதி நேரத்தில் கையேந்தினால் அந்த பிரார்த்தனைக்கு மதிப்பு இருக்காது. எனவே ஒவ்வொருவரும் மரண வேளையை அடைவதற்கு முன்பே பாவமன்னிப்புத் தேடிக்கொள்ள வேண்டும்.

அறியாமல் தீய காரியம் செய்து விட்டு தாமதமின்றி மன்னிப்புக் கேட்போருக்கே அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு உண்டு. அவர்களையே அல்லாஹ் மன்னிப்பான். அல்லாஹ் அறிந்தவனாகவும், ஞானமிக்கவனாகவும் இருக்கிறான்.

தீமைகளைச் செய்து விட்டு மரணம் நெருங்கும் வேளையில் ''நான் இப்போது மன்னிப்புக் கேட்கிறேன்'' எனக் கூறுவோருக்கும், (ஏக இறைவனை) மறுப்போராகவே மரணித்தவருக்கும் மன்னிப்பு இல்லை. அவர்களுக்காவே துன்புறுத்தும் வேதனையைத் தயாரித்துள்ளோம்.

அல்குர்ஆன் (4 : 17)

(முஹம்மதே!) வானவர்கள் அவர்களிடம் வருவதை, அல்லது உமது இறைவன் வருவதை, அல்லது உமது இறைவனின் சில சான்றுகள் வருவதைத்தான் அவர்கள் எதிர்பார்க்கிறார்களா? உமது இறைவனின் சில சான்றுகள் வரும் நாளில் ஏற்கனவே நம்பிக்கை கொண்டவர்களையும், நம்பிக்கையோடு நல்லறங்கள் செய்தவர்களையும் தவிர எவருக்கும் அவரது நம்பிக்கை பயன்தராது. ''நீங்களும் எதிர்பாருங்கள்! நாங்களும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம்'' எனக் கூறுவீராக!

அல்குர்ஆன் (6 : 158)

ஃபிர்ஆவ்ன் என்ற கொடிய அரசன் மரணிக்கும் தருவாயில் ஈமான் கொண்டு விட்டதாகக் கூறினான். மரணம் சம்பவிக்கும் போது இவ்வாறு அவன் கூறுவதால் அல்லாஹ் அவனுடைய நம்பிக்கையை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆகையால் அவன் மண்ணறையிலும், மறுமையிலும் தண்டிக்கப்படுகிறான்.

இஸ்ராயீலின் மக்களை கடல் கடக்கச் செய்தோம். ஃபிர்அவ்னும், அவனது படையினரும் அக்கிரமமாகவும், அநியாயமாகவும் வேர்களைப் பின்தொடர்ந்தனர். முடிவில் அவன் மூழ்கும் போது ''இஸ்ராயீலின் மக்கள் நம்பியவனைத்

தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை என நம்புகிறேன்; நான் முஸ்லிம்'' என்று கூறினான். இப்போது தானா? (நம்புவாய்!) இதற்கு முன் பாவம் செய்தாய்; குழப்பம் செய்பவனாக இருந்தாய் (என்று கூறினோம்.)

அல்குர்ஆன் (10 : 90)

குற்றம் புரிபவர்கள் மரணிப்பதற்கு முன்பே பாவமன்னிப்புத் தேட வேண்டும் என்று நபி (ஸல்) அவர்களும் கூறியுள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். ஒப்பாரி வைக்கும் வழக்கமுடைய பெண், தான் இறப்பதற்கு முன் பாவமன்னிப்புக் கோரி (அதிலிருந்து) மீளாவிட்டால், மறுமைநாளில் தாரால் ஆன (கீல்) நீளங்கியும் சொறிசிரங்குச் சட்டையும் அணிந்தவளாக அவள் நிறுத்தப்படுவாள்.

அறிவிப்பவர் : அபூமாலிக் கஅப் பின் ஆஸிம்
நூல் : முஸ்லிம் (1700)

## தீய வாழ்வைப் பற்றிய முன்னறிவிப்பு

மரணிக்கும் தறுவாயில் இருக்கும்போது நல்லவருக்கு சொர்க்கம் உண்டு என்றும் கெட்டவருக்கு வேதனை உண்டு என்றும் முன்னறிவிப்புச் செய்யப்படும். இந்த இறுதி நேரத்தில் தான் தன்னுடைய மண்ணறை வாழ்வு எப்படி அமையும் என்பதை இறக்கவிருப்பவர் அறிந்து கொள்வார்.

அநீதி இழைத்தோர் மரணத்தின் வேதனைகளில் இருக்கும் போது நீர் பார்ப்பீராயின் வானவர்கள் அவர்களை நோக்கி தமது கைகளை விரிப்பார்கள். ''உங்கள் உயிர்களை நீங்களே வெளியேற்றுங்கள்! அல்லாஹ்வின் பெயரால் உண்மையல்லாதவற்றை நீங்கள் கூறியதாலும், அவனது வசனங்களை நீங்கள் நிராகரித்ததாலும் இன்றையதினம் இழிவு தரும் வேதனைக்கு உட்படுத்தப்படுகிறீர்கள்'' (எனக் கூறுவார்கள்).

அல்குர்ஆன் (6 : 93)

அல்லாஹ்வின் தூர்தர் (ஸல்) அவர்கள், "யார் அல்லாஹ்வை சந்திக்க விரும்புகிறாரோ அவரை சந்திக்க அல்லாஹ்வும் விரும்புவான். யார் அவ்வாஹ்வைச் சந்திப்பதை வெறுக்கிறாரோ அவரை சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்'' என்று சொன்னார்கள். அப்போது நான், ''அல்லாஹ்வின் தூதரே! மரணத்தை வெறுப்பதையா (நீங்கள் சொல்கிறீர்கள்)? அவ்வாறாயின், (மனிதர்களாகிய) நாங்கள் அனைவருமே மரணத்தை வெறுக்கத்தானே செய்வோம்?'' என்று கேட்டேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ''(அல்லாஹ்வைச் சந்திப்பது என்பதற்கு பொருள்) அது வல்ல. மாறாக இறை நம்பிக்கையாளருக்கு (மரண வேளை யில்) இறைவன் கருணை புரியவிருப்பதாகவும் அவனைப் பற்றி அல்லாஹ் திருப்தி அடைந்திருப்பதாகவும் அவருக்குச் சொர்க்கத்தை வழங்கவிருப்பதாவும் நற்செய்தி கூறப்படும். அப்போது அவர் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புவார். அல்லாஹ் வும் அவரைச் சந்திக்க விரும்புவான். இறைமறுப்பாளருக்கு (மரண வேளை நெருங்கும் போது) அல்லாஹ் வழங்கவிருக் கும் வேதனை குறித்தும் அல்லாஹ் கோபம் கொண்டிருப்பது குறித்தும் அறிவிக்கப்படும். அப்போது அவர் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுப்பார். அல்லாஹ்வும் அவரைச் சந்திப்பதை வெறுப்பான்'' என்று (விளக்கம்) சொன்னார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)
நூல் : முஸ்லிம் (5208)

## புலம்பலும் சந்தோஷமும்

தனக்குக் கிடைத்துள்ள கஷ்டமான வாழ்வை நினைத்து கெட்டவர் அலறிக் கொண்டிருப்பார். தனக்குக் கிடைத்துள்ள இன்ப மான வாழ்வை எதிர்பார்த்தவராக நல்லவர் காத்துக் கொண்டிருப்பார். மரணித்த உடனே தீயவர்களின் புலம்பலும் நல்லவர்களின் சந்தோஷ

மும் ஆரம்பித்து விடுகிறது. இருவரில் யாராக இருக்க வேண்டும் என்று நீங்கள் ஆசைப்படுகிறீர்கள்? சிறிது நேரம் சிந்தித்துப் பாருங்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : பிரேதம் (பெட்டியில்) வைக்கப்பட்டு அதை ஆண்கள் தங்கள் தோள்களில் தூக்கிச் செல்லும் போது அந்த பிரேதம் நல்லறங்கள் புரிந்ததாக இருக்குமானால் "என்னை விரைந்து கொண்டு செல்லுங்கள்; என்னை விரைந்து கொண்டு செல்லுங்கள்" என்று கூறும்; அது நல்லறங்கள் புரியாததாக இருக்குமானால், "கைசேதமே! என்னை எங்கு கொண்டு செல்கிறீர்கள்" என்று கூறும். இவ்வாறு கூறும் சப்தத்தை மணிதர்களைத் தவிர அனைத்தும் செவியுறும். மனிதன் அதைச் செவியுற்றால் மயங்கி விழுந்து விடுவான்.

அறிவிப்பவர் : அபூசயீத் அல்குத்ரீ (ரலி)
நூல் : புகாரி (1380)

## தீயவர்களுக்கு மலக்குகளின் வரவேற்பு

கெட்டவன் மரணித்தவுடன் அவனது உயிரை வானவர்கள் எடுத்துச் செல்லும்போது அவன் இழிவையும் அவமானத்தையும் அடையும் விதத்தில் வானவர்கள் அவனுக்கு மோசமான வரவேற்பு கொடுப்பார்கள்.

அல்லாஹ்வின் தூதர் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: இறைமறுப்பாளன் இந்த உலகத்தை விட்டுப் பிரிந்து மறுமையை நோக்கியவனாக இருக்கும் போது கருப்பு முகங் களைக் கொண்ட வானவர்கள் வானத்திலிருந்து அவனிடம் வருவார்கள். (உயிரைக் கொண்டு செல்வதற்காக) அவர் களுடன் துணிகள் இருக்கும். அவனது பார்வை எட்டும் தூரம் வரை வானவர்கள் அமர்ந்திருப்பார்கள்.

பின்பு உயிரைக் கைப்பற்றும் வானவர் வந்து அவனுடைய தலைக்கு அருகில் அமருவார். கெட்ட ஆன்மாவே அல்லாஹ்வின் கோபத்துடனும், அதிருப்தியுடனும் நீ வெளியேறு என்று கூறுவார். அப்போதுதான் அவன் உடலிலிருந்து உயிர் பிரித் தெடுக்கப்படும். ஈரமான கம்பளியில் உள்ள ரோமத்தை பிடுங்கு பவரைப் போல் வானவர் உயிரை வாங்குவார். உயிரை வாங்கிய பிறகு கண் சிமிட்டும் நேரம் கூட தன் கையில் வைத்திருக்கா மல் உடனே அந்த துணிகளில் உயிரைச் சேர்த்து விடுவார்.

பூமியில் இறந்து அழுகிப்போன உடலிலிருந்து வெளி வரும் துர்நாற்றத்தைப் போன்ற கெட்ட வாடை அதிலிருந்து வெளியேறிக் கொண்டிருக்கும். இந்த (கெட்ட) உயிருடன் (வானில்) வானவர்கள் ஏறிச் செல்வார்கள். அந்த உயிருடன் வானவர் கூட்டத்தை அவர்கள் கடந்து செல்லும் போதெல்லாம் இந்த கெட்ட ஆன்மா யாருடையது? என்று வானவர்கள் கேட்காமல் இருக்க மாட்டார்கள். உலகில் அவன் அழைக்கப் பட்டுக் கொண்டிருந்த கெட்ட பெயரைக் கூறி இன்னாருடைய மகன் இன்னார் தான் என்று கூறுவார்கள்.

இறுதியாக அவன் இறுதி வானத்திற்கு கொண்டு செல்லப்பட்டு அவனுக்காக கதவைத் திறக்குமாறு கேட்கப் படும். ஆனால் அவனுக்கு கதவு திறக்கப்படாது. அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் (இந்த இடத்திலே) இந்த வசனத்தை ஓதிக் காட்டினார்கள். நமது வசனங்களைப் பொய்யெனக் கருதி, அதைப் புறக்கணிப்போருக்கு வானத்தின் வாசல்கள் திறக்கப்படமாட்டாது. ஊசித் துவாரத்தில் ஒட்டகம் நுழையும்வரை அவர்கள் சொர்க்கத்தில் நுழையமாட்டார்கள். இவ்வாறே குற்றவாளிகளை தண்டிப்போம் (7:40) கடைசி யில் பூமியில் உள்ள சிஜ்ஜீன் என்ற ஏட்டில் இவனது கணக்கை பதிவு செய்யுங்கள் என்று சங்கையும் மகத்துவமும் மிக்க அல்லாஹ் அப்போது கூறுவான்.

அறிவிப்பவர் : பராஉ பின் ஆஸிப் (ரலி)
நூல் : அஹ்மத் (17803)

ஓர் இறைமறுப்பாளரின் உயிர் பிரியும் போது அந்த உயிரிலிருந்து துர்வாடை கிளம்பும். வானிலுள்ளோர் அதை சபிப்பார்கள். வானுலகவாசிகள், ''ஒரு தீய ஆன்மா பூமியிலிருந்து வந்திருக்கிறது'' என்று கூறுவார்கள். அப்போது ''இதை இறுதித் தஹ்ணை வரை கொண்டு செல்லுங்கள்'' என்று கூறப்படும். இதைப் பற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறுகையில், தம்மிடமிருந்த மிருதுவான துணியை தமது மூக்குவரை ''இப்படி'' கொண்டு சென்றார்கள்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : முஸ்லிம் (5119)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இறந்தவன் இறைமறுப்பாளனாக இருந்தால் வானவர்கள் அவனுடைய ஆத்மாவைத் துணியில் வைத்து வானத்தை நோக்கி கொண்டு செல்வார்கள். அப்போது (வானலோகத்தில் உள்ள) வானவர்கள் தங்கள் மூக்கைப் பிடித்துக் கொண்டு கெட்ட ஆன்மா பூமியிலிருந்து வந்திருக்கிறது என்று கூறுவார்கள். வானவர்கள் அந்த ஆன்மாவுடன் மேலே ஏறிச் செல்வார்கள். அப்போது (கெட்ட ஆன்மாவே) அல்லாஹ்வின் வேதனையையும் இழிவையும் நற்செய்தியாகப் பெற்றுக் கொள் என்று கூறப்படும். பிறகு இறுதித் தவணை வரை கொண்டு செல்லுங்கள் என்று கூறப்படும்.

அறிவிப்பவர் : பராஉ பின் ஆஸிப் (ரலி)

நூல் : பைஹகீ (இஸ்பாது அதாபில் கப்ர்) (8)

## தீயவர்களுக்கான விசாரணை

கெட்ட மனிதன் விசாரணைக்குச் செல்லும்போது அவனுக்கு பதட்டம் ஏற்படும். வானவர்கள் கேட்கின்ற கேள்விகளுக்கு அவன் சரியான எந்த பதிலையும் சொல்ல மாட்டான். பரீட்சையில் தோற்று விடுவான்.

கெட்ட மனிதன் நடுக்கத்துடனும் திடுக்கத்துடனும் மண்ணறையில் உட்கார வைக்கப்படுவான். எந்தக் கொள்கையில் நீ இருந்தாய் என்று அவனிடத்தில் வினவப்படும். அதற்கு அவன் எனக்குத் தெரியாது என்று கூறுவான்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : இப்னுமாஜா (4258)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஓர் அடியானின் உடலை சவக்குழியில் அடக்கம் செய்துவிட்டு, அவருடைய தோழர்கள் திரும்பும் போது அவர்களது செருப்பின் ஓசையை பிரேதம் (மய்யித்) செவியேற்கும். அதற்குள் இரண்டு வானவர்கள் அவனிடம் வந்து அவனை எழுப்பி உட்கார வைத்து "முஹம்மத் எனும் இந்த மனிதரைப் பற்றி நீ என்ன கருதிக் கொண்டிருந்தாய்?" எனக் கேட்பார். நிராகரிப்போனாகவோ, நயவஞ்சகனாகவோ இருந்தால் கேள்வி கேட்கப்பட்டதும், "எனக்குத் தெரியாது; மக்கள் சொல்வதையே நானும் சொல்லிக் கொண்டிருந்தேன்" என்பான். அப்போது அவனிடம் "நீயாக எதையும் அறிந்ததுமில்லை; குர்ஆனை ஓதி (விளங்கி)யதுமில்லை என்று கூறப்படும். பிறகு இரும்பாலான சுத்தியால் அவனது இரு காதுகளுக்குமிடையே (பிடரியில்) ஓர் அடி கொடுக்கப்படும். அப்போது மனிதர்கள், ஜின்களைத் தவிர மற்ற அனைத்தும் செவியேற்குமளவுக்கு அவன் அலறுவான்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல் : புகாரி (1338)

## பதில் கூறாதவனுக்கு தண்டனை

கேட்கப்பட்ட கேள்விகளுக்கு முறையான பதிலைக் கூறாதவனுக்கு சுத்தியலால் பலத்த அடி அவனுடைய பிடரியில் கொடுக்கப்படும். நெருப்பில் புரட்டப்படுவான்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : (கேள்வி கேட்ட) பிறகு இரும்பாலான சுத்தியால் (சரியான பதில் கூறாத) அவனது இரு காதுகளுக்குமிடையே (பிடரியில்) ஓர் அடி கொடுக்கப்படும். அப்போது மனிதர்கள், ஜின்களைத் தவிர மற்ற அனைத்தும் செவியேற்குமளவுக்கு அவன் அலறுவான்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல் : புகாரி (1338)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : இவனுக்கு நெருப்பாலான ஆடையை அணியக் கொடுங்கள். நெருப்பாலான விரிப்பைக் கொடுங்கள். நரகத்தின் வாசலை இவனை நோக்கி திறந்து விடுங்கள் என்று வானிலிருந்து ஒருவர் கூறுவார். நரகத்தின் சூடும், ஜுவாலையும் அவனிடத்தில் வந்து கொண்டிருக்கும். அவனுடைய விலா எலும்புகள் ஒன்றோடொன்று கோர்த்துக் கொள்ளும் அளவிற்கு மண் ணறை அவனை நெருக்கும். பிறகு கண்பார்வையற்ற வாய் பேசாத ஒருவர் அவனை (வேதனை செய்வதற்காக) நியமிக்கப் படுவார். அவருடன் இரும்பாலான சுத்தியல் இருக்கும். அதைக் கொண்டு மலையை அடித்தால் மலைகூட மண்ணாகி விடும். ஜின்களையும், மனிதர்களையும் தவிர கிழக்கிற்கும் மேற்கிற் கும் மத்தியில் உள்ள அனைத்தும் செவியேற்குமளவுக்கு அந்த சுத்தியலால் அவனை ஒரு அடி அடிப்பார். அவன் மண் ணாகி விடுவான். மீண்டும் அவனுக்கு ஆன்மா வழங்கப்படும்.

அறிவிப்பவர் : பராஉ பின் ஆஸிப் (ரலி)

நூல் : அபூதாவூத் (4127)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : கெட்ட வாடையுடன் அசிங்கமான ஆடையுடன் கோரமான முகத்துடன் ஒருவர் (இறந்துவிட்ட கெட்ட) மனிதரிடம் வருவார். உனக்கு தீங்கு தரக் கூடியதை நற்செய்தியாகப் பெற்றுக்கொள். உனக்கு வாக்களிக்கப்பட்ட நாள் இதுதான் என்று கூறுவார். அதற்கு அவன் உன் முகமே மீண்டும் மீண்டும் தீய செய்தியைத் தரு கிறதே நீயார்? என்று கேட்பான். அதற்கு நான் தான் நீ செய்து

வந்த தீமையான காரியங்கள் என்று பதில் கூறுவார். அவன் என் இறைவா மறுமை நாளை வரவழைத்து விடாதே என்று கூறுவான்.

அறிவிப்பவர் : பராஉ பின் ஆஸிப் (ரலி)
நூல் : அஹ்மத் (17803)

## நெருக்கடியான வாழ்வில் பாம்புகள் தரும் வேதனை

இறந்தவனிடத்தில் நன்மைகள் ஏதும் இருக்கிறதா? என்று பார்க்கப்படும். அவனிடத்தில் எந்த நன்மையும் இல்லாமல் நல்லுபதேசங்களை மறுத்தவனாக அவன் இருந்தால் பயத்தால் நடுங்கிக் கொண்டிருப்பான். மண்ணறையில் கேட்கப்படும் கேள்விகளுக்கு முறையாக பதில் ஏதும் கூற மாட்டான். இதனால் அவனுடைய எலும்புகள் உடையும் அளவிற்கு அவனுக்கு மண்ணறையில் நெருக்கடி தரப்படும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : மண்ணறையில் இறைமறுப்பாளனின் தலைப்புறமாக (நன்மை ஏதும் இருக்கிறதா? என்று) பார்க்கப்படும். ஆனால் (அங்கு) எதுவும் இருக்காது. அவனது கால்களிடத்தில் (நன்மை ஏதும் இருக்கிறதா? என்று) பார்க்கப்படும். ஆனால் (அங்கும்) எதுவும் இருக்காது. எனவே அவன் திடுக்கிட்டு பயந்தவனாக அமருவான். உங்களுடன் இருந்த இந்த மனிதர் குறித்து நீ என்ன கூறிக் கொண்டிருந்தாய்? என்று அவனிடம் வினவப்படும். அதற்கு அவன் மக்கள் எதையோ கூறிக் கொண்டிருப்பதை நான் கேட்டேன். அவர்கள் கூறியது போல் நானும் கூறிக் கொண்டிருதேன் என்று கூறுவான். நீ உண்மை கூறினாய். இப்படித்தான் நீ வாழ்ந்தாய். இப்படியே மரணித்தாய். இவ்வாறு அல்லாஹ் நாடினால் நீ எழுப்பப்படுவாய் என்று அவனிடம் கூறப்படும். அவனுடைய விலா எழும்புகள் ஒன்றோடொன்று பின்னிக் கொள்ளும் அளவிற்கு மண்ணறை அவனை நெருக்கும். இதைப் பற்றித்தான் அல்லாஹ் (இந்த வசனத்தில்) கூறுகிறான். எனது போதனையை புறக்கணிப்

பவனுக்கு நெருக்கடியான வாழ்க்கை உண்டு. அவனை கியாமத் நாளில் குருடனாக எழுப்புவோம்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : தப்ரானி பாகம் : 3 பக்கம் : 105

எனது போதனையைப் புறக்கணிப்பவனுக்கு நெருக்கடியான வாழ்க்கை உண்டு. அவனை கியாமத் நாளில் குருடனாக எழுப்புவோம் (20:124) என்ற இந்த வசனம் எது குறித்து இறங்கியது என்று உங்களுக்குத் தெரியுமா? நெருக்கடியான வாழ்க்கை என்றால் எது என்றும் உங்களுக்குத் தெரியுமா? என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் மக்களிடத்தில் கேட்டார்கள். அதற்கு மக்கள் அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக்க அறிந்தவர்கள் என்று கூறினார்கள். இறை மறுப்பாளன் அவனுடைய மண்ணறையில் வேதனை செய்யப்படுவதை (இவ்வசனம் குறிப்பிடுகிறது). எனது உயிர் எவனது கைவசத்தில் இருக்கிறதோ அந்த அல்லாஹ்வின் மீதாணையாக அவனுக்கெதிராக தொண்ணூற்றொன்பது பாம்புகள் சாட்டப்படும். அந்த பாம்புகளைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா? அவை தொண்ணூற்றொன்பது பாம்புகளாகும். ஒவ்வொரு பாம்புகளுக்கும் ஏழு தலைகள் இருக்கும். மறுமைநாள்வரை அவனுடைய உடம்பில் (விஷக் காற்றை) அவை ஊதிக் கொண்டும் அவனை தீண்டிக் கொண்டும் உராய்ந்து கொண்டும் இருக்கும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : முஸ்னது அபீயஃலா (6504)

## நெருப்பு வீடு

நபி (ஸல்) அவர்களுக்கு எதிரிகள் அதிகமான இடைஞ்சல்களைக் கொடுத்தார்கள். இவர்களின் மண்ணறைகளை அல்லாஹ் நெருப்பால் நிரப்புவானாக என்று இவர்களுக்கு எதிராக நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்துள்ளார்கள். தீயவர்களுக்கு

மண்ணறையில் இப்படி ஒரு தண்டனையும் தரப்படலாம் என்பதை இதிலிருந்து நாம் அறிந்து கொள்ளலாம்.

அஹ்ஸாப் (அரபுக் குலங்கள் அனைத்தும் ஒன்று திரண்டு தாக்க வந்த அகழ்ப்)போரின் போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ''அல்லாஹ் (எதிரிகளுடைய) வீடு களையும், புதைக்குழிகளையும் நெருப்பால் நிரப்புவானாக! அவர்கள் சூரியன் மறையும் நேரம்வரை நடுத் தொழுகை(யான அஸர் தொழுகை)யிலிருந்து நமது கவனத்தைத் திருப்பி விட்டார்கள்'' என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : அலீ (ரலி)

நூல் : புகாரி (2931) முஸ்லிம் (1104)

# நரகம் காட்டப்பட்டு அச்சுறுத்தப்படுவான்

மரணித்தவன் கெட்டவனாக இருந்தால் அவனுடைய கண் ணின் முன்னால் நரகம் கொண்டு வந்து காட்டப்பட்டுக் கொண்டே இருக்கும். அவன் செல்லவிருக்கும் நரகத்தைப் பார்த்து பயந்து கொண்டே நிம்மதியின்றி மண்ணறை வாழ்கையை அனுபவிப்பான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங் களில் ஒருவர் இறந்து விட்டால் அவர் தங்குமிடம் அவருக்கு காலையிலும் மாலையிலும் எடுத்துக் காட்டப்படும். அவர் சொர்க்கவாசியாக இருந்தால் சொர்க்கத்திலிருப்பதாகவும் நரக வாசியாக இருந்தால் நரகத்திலிருப்பதாகவும் (எடுத்துக்காட்டப் படும்.) மேலும் ''அல்லாஹ் மறுமை நாளில் உன்னை எழுப்பு கின்றவரை இதுவே (கப்றே) உனக்கு தங்குமிடம்'' என்று கூறப்படும்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)

நூல் : புகாரி (1379)

கெட்டவன் கைசேதம் அடைய வேண்டும் என்பதற்காக சொர்க்கம் அவனுக்கு முன்னால் காட்டப்படும். அதைப் பார்த்து பார்த்து கைசேதப்பட்டுக் கொண்டே மண்ணறை வாழ்வைக் கழிப்பான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: சொர்க்கத்தின் வாசலை இவனுக்கு திறந்து காட்டுங்கள் என்று கூறப்படும். சொர்க்கத்தின் வாசல் அவனை நோக்கி திறக்கப்படும். அப்போது அல்லாஹ்விற்கு நீ கட்டுப்பட்டு நடந்திருந்தால் இது தான் அல்லாஹ் உனக்கு தயார் செய்த இடமாக ஆகியிருக்கும் என்று கூறப்படும். அவன் மேலும் கைசேதத்தையும் நஷ்டத்தையும் உணருவான். பிறகு இவனுக்கு நரகத்தின் வாசலை திறந்து விடுங்கள் என்று கூறப்படும். அவனை நோக்கி நரகத்தின் வாயில் திறக்கப்படும். இதுதான் உனது இடம். அல்லாஹ் உனக்கு தயார் செய்ததும் இதுதான் என்று அவனிடம் சொல்லப்படும். அப்போது அவன் மென்மேலும் கைசேதத்தையும் நஷ்டத்தையும் உணருவான்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : தப்ரானி பாகம்:3 பக்கம்:105

## கடுமையான வேதனை

இந்த உலகத்தில் யாரும் அனுபவித்திருக்க முடியாத அளவிற்கு மண்ணறையின் வேதனை மிகக் கடுமையானதாகும். மண்ணறை வாழ்க்கை என்பது மறுமையின் முதல் நிலையாகும். மறுமை வாழ்வில் தீயவர்களுக்குக் கிடைக்கும் வேதனை எவ்வளவு பயங்கரமாக இருக்கும் என்பதைக் குர்ஆன் விவரிக்கிறது.

அவர்களுக்கு (தீயவர்களுக்கு) இவ்வுலக வாழ்க்கையிலும் வேதனை உண்டு. மறுமையின் வேதனை கடுமையானது. அவர்களை அல்லாஹ்விடமிருந்து பாதுகாப்பவன் எவனும் இல்லை.

அல்குர்ஆன் (13 : 34)

எனது வேதனை தான் துன்புறுத்தும் வேதனை.

அல்குர்ஆன் (15 : 50)

அல்லாஹ்வின் வேதனை கடுமையானது.

அல்குர்ஆன் (22 : 2)

மறுமையின் வேதனை கடுமையானது; நிலையானது.

அல்குர்ஆன் (20 : 127)

மறுமையின் வேதனை மிகவும் இழிவுபடுத்தக் கூடியது.

அல்குர்ஆன் (41 : 16)

மறுமையின் வேதனை மிகப் பெரியது. அவர்கள் அறிய வேண்டாமா?

அல்குர்ஆன் (68 : 33)

## வேதனையால் அலறுகிறார்கள்

தீயவர்கள் மண்ணறையில் வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். வேதனை தாங்க முடியாமல் அலறிக் கொண்டிருக்கிறார்கள்.

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்கள் பனுந் நஜ்ஜார் குலத்தாருக்குச் சொந்தமான தோட்டமொன்றில் தமது கோவேறு கழுதையின் மீதிருந்தார்கள். அப்போது அவர்களுடன் நாங்களும் இருந்தோம். அப்போது அவர்களின் கோவேறுக் கழுதை அவர்களைத் தூக்கியெறியும் அளவுக்கு வெருண்டோடியது.

அங்கு ஆறு அல்லது ஐந்து அல்லது நான்கு மண்ணறைகள் இருந்தன. (இவ்வாறு தான் சயீத் அல்ஜுரைரீ (ரஹ்) அவர்கள் அறிவித்து வந்ததாக இப்னு உலய்யா (ரஹ்) அவர்கள் தெரிவித்தார்கள்.) அப்போது நபி (ஸல் அவர்கள், "இந்த மண்ணறைகளில்அடக்கம் செய்யப்பட்டிருப்பவர்களைப் பற்றி யார் அறிவார்?" என்று கேட்டார்கள். ஒரு மனிதர், "நான் (அறிவேன்)" என்றார்.

நபி (ஸல்) அவர்கள், "இவர்கள் எப்போது இறந்தார்கள்?" என்று கேட்டார்கள். அவர், "இணைவைப்பு (கோலோச்சி

யிருந்த அறியாமைக்) காலத்தில் இறந்தனர்'' என்று பதிலளித்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள், ''இந்தச் சமுதாயம் மண்ணறைகளில் சோதிக்கப்படுகின்றது. நீங்கள் (இறந்தவர்களைப்) புதைக்காமல் விட்டுவிடுவீர்கள் என்ற அச்சம் மட்டும் எனக்கில்லையாயின், நான் செவியுறும் வேதனையை உங்களுக்கும் கேட்கச் செய்யும்படி அல்லாஹ்விடம் பிரார்த்தித்து இருப்பன்'' என்று கூறினார்கள்.

பிறகு எங்களை நோக்கித் தமது முகத்தைத் திருப்பி, ''நரக நெருப்பின் வேதனையிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள்'' என்றார்கள். மக்கள், ''நரக நெருப்பின் வேதனையிலிருந்து நாங்கள் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறோம்'' என்று கூறினர்.

பிறகு, ''மண்ணறையின் வேதனையிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள்'' என்றார்கள். மக்கள், ''மண்ணறையின் வேதனையிலிருந்து நாங்கள் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருகிறோம்'' என்று கூறினர்.

அறிவிப்பவர் : ஸைத் பின் ஸாபித் (ரலி)

நூல் : முஸ்லிம் (5502)

ஒரு தடவை நபி (ஸல்) அவர்கள் சூரியன் மறையும் போது வெளியே புறப்பட்டார்கள். அப்போது ஒரு சப்தத்தைக் கேட்டு விட்டு, ''யூதர்கள் அவர்களது கப்றுகளில் வேதனை செய்யப்படுகிறார்கள்'' எனக் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூஅய்யூப் (ரலி)

நூல் : புகாரி (1375)

நபி (ஸல்) அவர்கள் தன் தேவையை நிறைவேற்றிக் கொள்வதற்காக வெளியில் சென்றார்கள். பிலால் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் வந்து கொண்டிருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் ஒரு மண்ணறையைக் கடந்து சென்றார்கள். அப்போது பிலாலே நான் கேட்டுக் கொண்டிருப்

பதை நீ கேட்கிறாயா? என்று கேட்டார்கள். அதற்கு பிலால் (ரலி) அவர்கள் எனக்கு எதுவும் கேட்கவில்லையே என்று கூறினார்கள். இந்தக் கப்ரில் உள்ள்வர் வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருக்கிறார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அந்த நபரைப் பற்றி விசாரிக்கப்பட்டது. அவர் ஒரு யூதனாக இருந்தார்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)
நூல் : அஹ்மது (12072)

## மனிதர்களால் உணர முடியாது

மண்ணறையில் பாவிகள் வேதனை செய்யப்படும் போது அவர்கள் எழுப்பும் அலறலை மனிதர்களையும், ஜின்களையும் தவிர மற்ற உயிரினங்கள் அனைத்தும் செவியேற்கிறது.

அல்லாஹ்வின் தூதர் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அவனிடம் "நீயாக எதையும் அறிந்ததுமில்லை; (குர்ஆனை) ஓதி (விளங்கி)யதுமில்லை என்று கூறப்படும். பிறகு இரும்பாலான சுத்தியால் அவனது இரு காதுகளுக்குமிடையே (பிடரியில்) ஓர் அடி கொடுக்கப்படும். அப்போது மனிதர்கள், ஜின்களைத் தவிர மற்ற அனைத்தும் செவியேற்குமளவுக்கு அவன் அலறுவான்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)
நூல் : புகாரி (1338)

## நபியவர்களை அச்சுறுத்திய வேதனை

நபி (ஸல்) அவர்கள் மரணித்த பிறகு அவர்களுக்கு நல்ல வாழ்வையே அல்லாஹ் தருவான் என்பது உறுதியான விஷயம். நன்மையான காரியங்களை நம்மை விட பன்மடங்கு நிறையவே செய்து வந்தார்கள்.

என்றாலும் மண்ணறை வேதனை குறித்து அவர்கள் அச்சப்படாத நாள் இல்லை. தினந்தோறும் அல்லாஹ்விடம் மண்ணறை வேதனையை விட்டும் பாதுகாப்புத் தேடுபவராக இருந்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள், ''இறைவா! நான் இயலாமையி லிருந்தும், சோம்பலிலிருந்தும், கோழைத்தனத்திலிருந்தும், மூப்பிலிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், வாழ்வின் சோதனையிலிருந்தும், இறப்பின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன். மேலும், புதைக் குழியின் வேதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்'' என்று பிரார்த்திப்பது வழக்கம்.

அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி)

நூல் : புகாரி (2823)

நபி (ஸல்) அவர்கள் அடக்கவிட (கப்று) வேதனையை விட்டுப் பாதுகாப்புக் கோரியதைத் தாம் செவியுற்றதாக காலித் பின் சயீத் (ரலி) அவர்களுடைய ஒரு புதல்வி கூறுகிறார்.

அறிவிப்பவர் : மூசா பின் உக்பா (ரலி)

நூல் : புகாரி (1376)

## அவசியம் பாதுகாப்புத் தேட வேண்டும்

கப்ரு வாழ்வில் தீயவனுக்கு கிடைக்கும் கடுமையான தண்டனை களை நாம் அறிந்து கொண்டோம். இப்படிப்பட்ட படுமோசமான வாழ்வு நமக்கு அமைந்து விடாமல் இருப்பதற்காக நாம் அனைவரும் முயற்சி செய்வதுடன் கப்ரு வேதனையிலிருந்து இறைவனிடம் பாது காப்புத் தேட வேண்டும். ஏனென்றால் மண்ணறை வேதனையை விட்டு பாதுகாப்புத் தேடுமாறு நபி (ஸல்) அவர்கள் நமக்குக் கட்டளை யிட்டுள்ளார்கள்.

ஒரு யூதப் பெண் என்னிடம் யாசித்தபடி வந்தாள். அப் போது அவள் என்னிடம், ''அடக்கக் குழியின் (கப்று) வேதனை யிலிருந்து அல்லாஹ் உம்மைக் காப்பாற்றுவானாக!'' என்று கூறினாள். ஆகவே நான் இதுபற்றி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் கூறி, ''மனிதர்கள் தம் அடக்கவிடங்களில் வேதனை செய்யப்படுவார்களா?'' என்று கேட்டேன். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அ(டக்கவிடத்தின் துன்பத்)திலிருந்து நானும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத்

தேடுகிறேன்'' என்று கூறினார்கள். பிறகு அடக்கக்குழியின் (கப்று) வேதனையிலிருந்து பாதுகாப்புத் தேடுமாறு மக்களைப் பணித்தார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)
நூல் : புகாரி (1056)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நீங்கள் அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து அல்லாஹ் விடம் பாதுகாப்புக் கோருங்கள். சவக்குழியின் வேதனையி லிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். (பெருங் குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந் தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். வாழ்வின் சோதனையிலிருந்தும் இறப்பின் சோதனையிலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : முஸ்லிம் (1034)

(ஒருமுறை) நபி (ஸல்) அவர்களின் துணைவியார் உம்மு ஹபீபா (ரலி) அவர்கள், ''இறைவா! என் கணவர் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், என் தந்தை அபூசுஃப்யான், என் சகோதரர் முஆவியா ஆகியோர் (நீண்ட நாட்கள் வாழ்வதன்) மூலம் எனக்குப் பயனளிப்பாயாக!'' என்று பிரார்த்தித்தார்கள்.

அப்போது நபி (ஸல்) அவர்கள், ''நீ (ஏற்கனவே) நிர்ணயிக்க விட்ட ஆயுளையும் குறிக்கப்பட்டு விட்ட (வாழ்) நாட்களையும் பங்கிடப்பட்டு விட்ட வாழ்வாதாரத்தையும் அல்லாஹ்விடம் கேட்டிருக்கிறாய். அல்லாஹ் அவற்றில் எதையும், அதற்குரிய நேரத்திற்கு முன்பே ஒருபோதும் கொண்டு வந்துவிட மாட்டான்; அவற்றில் எதையும், அதற்குரிய நேரத்தை விட்டுத் தாமதப்படுத்தவுமாட்டன். நரக நெருப்பின் வேதனையிலிருந்தோ, அல்லது மண்ணறையின் வேதனையிலிருந்தோ உன்னைக் காக்கும்படி நீ அல்லாஹ்

விடம் வேண்டியிருந்தால் நன்றாகவும் சிறந்ததாகவும் இருந்திருக்கும்'' என்று சொன்னார்கள்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி)

நூல் : முஸ்லிம் (5176)

## தொழுகையிலும் தொழுகைக்குப் பின்பும் பாதுகாப்புத் தேட வேண்டும்

தொழுகையில் அத்தஹிய்யாத் ஓதும் போதும் தொழுது முடித்த பிறகும் மண்ணறை வேதனையை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேட வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் நமக்குக் கற்றுக் கொடுத்துள்ளார்கள். எனவே அந்தக் குறிப்பிட்ட நேரத்தில் மறவாமல் பாதுகாப்புத் தேட வேண்டும்.

ஆயிஷா (ரலி) கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் தாம் தொழுகின்ற தொழுகைகளில் அடக்கவிட (கப்று) வேதனையிலிருந்து (அல்லாஹ்விடம்) பாதுகாப்புக் கோராமல் இருந்ததேயில்லை.

அறிவிப்பவர் : மஸ்ரூக் (ரலி)

நூல் : புகாரி (1372)

ஆசிரியர் சிறுவர்களுக்குப் பாடம் போதிப்பதைப் போல, சஅத் பின் அபீ வக்காஸ் (ரலி) அவர்கள் தம் மக்களுக்குப் பின் வரும் (பிரார்த்தனை) வாசகங்களைக் கற்றுக் கொடுத்தார்கள்: அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மினல் ஜுஃப்னி, வஅஊது பிக்க அன் உரத்த இலா அர்தலில் உமுரி, வ அஊது பிக்க மின் ஃபித்னத்தித் துன்யா, வஅஊது பிக்க மின் அதாபில் கப்ரி - ''இறைவா! நான் கோழைத் தனத்திலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்; உலகின் சோதனைகளிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்; புதை குழியின் வேதனையிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோருகிறேன்'' என்று கூறிவிட்டு, ''இந்த விஷயங்களிலிருந்தல்லாம்

நபி (ஸல்) அவர்கள் தொழுகைக்குப் பின்பு பாதுகாப்புக் கோரி வந்தார்கள்'' எனறும் அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அம்ரு பின் மைமூன் அல் அவ்தீ (ரஹ்)
நூல் : புகாரி (2822)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களில் ஒருவர் (தொழுகையில்) அத்தஹிய்யாத் அமர்வில் இருக்கும் போது நான்கு விஷயங்களிலிருந்து அல்லாஹ் விடம் பாதுகாப்புக் கோருங்கள். (அவை:) அல்லாஹும்ம இன்னீ அஊது பிக்க மின் அதாபி ஜஹன்னம, வ மின் அதாபில் கப்ரி, வ மின் ஃபித்னத்தில் மஹ்யா வல் மமாத்தி, வ மின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜால்.

(பொருள் : இறைவா! உன்னிடம் நான் நரகத்தின் வேதனையிலிருந்தும், வாழ்வின் சோதனையிலிருந்தும், இறப்பின் சோதனையிலிருந்தும், (பெருங்குழப்பவாதியான) மஸீஹுத் தஜ்ஜாலால் ஏற்படும் குழப்பத்தின் தீங்கிழிருந்தும் பாதுகாப்புக் கோருகிறேன்.)

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : முஸ்லிம் (1030)

## மண்ணறை தண்டனைக்கான காரணங்கள்

உயிருடன் இருக்கும் போது செய்த பாவங்களுக்காக மண்ணறையில் தண்டனை தரப்படுகிறது. ஒவ்வொரு நாளும் ஏராளமான பாவமான காரியங்களை மனிதன் சம்பாதித்துக் கொண்டிருக்கிறான். இந்தப் பாவங்களை மன்னித்து அருள்புரியு மாறு அல்லாஹ்விடம் நாம் பிரார்த்தனை செய்ய வேண்டும். நம்மால் முடிந்த அளவு பாவமான காரியங்களில் ஈடுபடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். குற்றம் புரிந்து விட்டால் மனம் வருந்தி இறைவனிடம் பாவமன்னிப்பு கேட்டிட வேண்டும்.

உலகில் புரிந்த குற்றங்களுக்கு மண்ணறையில் வேதனை தரப்படுவதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

“குடும்பத்தினர் (ஒப்பாரி வைத்து) அழுவதால் மண்ணறையில் (இருக்கும் அவர்களின் உறவினரான) இறந்தவர் வேதனை செய்யப்படுகின்றார்” என்று நபி (ஸல்) அவர்கள் சொன்னதாக இப்னு உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் என்று ஆயிஷா (ரலி) அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. அப்போது ஆயிஷா (ரலி) அவர்கள், “(நபி (ஸல்) அவர்கள் அப்படிச் சொல்லவில்லை). 'இறந்தவர் (தன் வாழ்நாளில் புரிந்த) சிறிய, பெரிய பாவங்களின் காரணத்தால் வேதனை செய்யப்படுகின்றார். அவருடைய குடும்பத்தினரோ, இப்போது அவருக்காக அழுது கொண்டிருக்கின்றனர்' என்று தான் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்” என்று சொன்னார்கள்.

அறிவிப்பவர் : உர்வா பின் ஸுபைர் (ரலி)
நூல் : புகாரி (3978)

## வழிகெட்ட கொள்கையைப் பின்பற்றுதல்

பாவமான காரியங்கள் அனைத்தும் தடண்டனையைப் பெற்றுத் தரக் கூடியதாக இருந்தாலும் குறிப்பிட்ட சில பாவங்களினால் மண்ணறையில் கிடைக்கும் தண்டனையை நபி (ஸல்) அவர்கள் நமக்குத் தெளிவுபடுத்தியுள்ளார்கள். இந்தப் பாவங்கள் நமக்கு ஏற்படாதவாறு நாம் நடந்து கொண்டால் மண்ணறை தண்டனையி லிருந்து அல்லாஹ் நாடினால் தப்பித்துக் கொள்ளலாம்.

இன்றைக்கு சமுதாயத்தில் பல வழிகெட்ட கொள்கைகள் தோன்றி யிருக்கிறது. நபி (ஸல்) அவர்களின் பொன்மொழிகளை ஏற்றுக் கொள்ளக் கூடாது குர்ஆன் மட்டும் போதும் என்று கூறி ஒரு சாரார் இஸ்லாத்தை விட்டு வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள்.

தர்ஹா வழிபாடு, தனிமனிதர் வழிபாடு போன்றவைகளால் ஒரு சாரார் அல்லாஹ்விற்கு இணை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

நபி (ஸல்) அவர்களைப் போன்று மிர்ஸா குலாம் என்பவனும் நபி என்று நம்பி ஒரு ,சாரார் இஸ்லாத்தை விட்டு தடம் புரண்டு விட்டார்கள்.

மேலும் குர்ஆன், ஹதீஸ் இந்த இரண்டை மட்டும் மூல ஆதார மாகக் கொள்ளாமல் மற்றவர்களின் கருத்துகளையும் புதுமையான விஷயங்களையும் மார்க்கமாக ஏற்றுச் செயல்படுவதும் மக்களிடையே இருந்து வருகிறது.

குர்ஆனையும், ஹதீஸையும் மட்டும் பின்பற்ற வேண்டும் என்ற நேரான கொள்கையை ஏற்று இதைத் தவிர உள்ள அனைத்து வழி கெட்ட கொள்கைகளையும், கோட்பாடுகளையும் புறக்கணித்தால் மண்ணறை வாழ்க்கையில் தண்டனையிலிருந்து தப்பிக்கலாம். இல்லையென்றால் மண்ணறை வாழ்க்கை நரக வாழ்க்கையாக இருக்கும் என்பதில் எள் அளவும் சந்தேகமில்லை.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். ஓர் அடியாரின் உடலை சவக்குழியில் அடக்கம் செய்து விட்டு, அவருடைய தோழர்கள் திரும்பும் போது அவர்களது செருப் பின் ஓசையை பிரேதம் (மய்யித்) செவியேற்கும். அதற்குள் இரண்டு வானவர்கள் அவனிடம் வந்து, அவனை எழுப்பி உட்கார வைத்து, ''முஹம்மத் எனும் இந்த மனிதரைப் பற்றி நீ என்ன கருதிக் கொண்டிருந்தாய்?'' எனக் கேட்பர். நிராகரிப் பவனாகவோ, நயவஞ்சகனாகவோ இருந்தால் கேள்வி கேட்கப் பட்டதும் ''எனக்குத் தெரியாது; மக்கள் சொன்னதையே நானும் சொல்லிக் கொண்டிருந்தேன்'' என்பான். அப்போது அவனிடம் ''நீயாக எதையும் அறிந்ததுமில்லை; (குர்ஆனை) ஓதி(விளங்கி)யதுமில்லை'' என்று கூறப்படும். பிறகு இரும்பாலான சுத்தியால் அவனது இரு காதுகளுக்குமிடையே (பிடரியில்) ஓர் அடி கொடுக்கப்படும். அப்போது மனிதர்கள், ஜின்களைத் தவிர மற்ற அனைத்தும் செவியேற்குமளவுக்கு அவன் அலறுவான்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)
நூல் : புகாரி (1338)

யூதர்களாக மரணித்தால் மண்ணறையில் யூதர்கள் வேதனை செய்யப்படுவதாக நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தினார்கள்.

(ஒருமுறை) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சூரியன் மறைந்த பின் வெளியே புறப்பட்டார்கள். அப்போது ஒரு சப்தத்தைக் கேட்டுவிட்டு, "யூதர்கள் அவர்களின் கல்லறையில் வேதனை செய்யப்படுகிறார்கள்" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூ அய்யூப் (ரலி)
நூல் : முஸ்லிம் (5504)

## இறைவேதத்தை அலட்சியப்படுத்துதல்

இறைவன் வகுத்த சட்டதிட்டடங்களை அடிப்படையாகக் கொண்டு நாம் வாழ வேண்டும் என்பதற்காக அல்லாஹ் நமக்கு திருக் குர்ஆனையும் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் வாழ்க்கையையும் தந்துள்ளான். இவ்விரண்டின் அடிப்படையில் வாழ்ந்தவர் மண்ணறையிலும், மறுமையிலும் வெற்றி பெறுவார். ஆனால் இந்த உபதேசத்தைக் காதில் வாங்காமல் அலட்சியப்படுத்தி மரணிப்பவருக்கு மண்ணறையில் நெருக்கடியான வாழ்க்கை கொடுக்கப்படுகிறது.

எனது போதனையைப் புறக்கணிப்பவனுக்கு நெருக்கடியான வாழ்க்கை உண்டு. அவனை கியாமத் நாளில் குருடனாக எழுப்புவோம்.

அல்குர்ஆன் (20 : 124)

எனது போதனையைப் புறக்கணிப்பவனுக்கு நெருக்கடியான வாழ்க்கை உண்டு. அவனை கியாமத் நாளில் குருடனாக எழுப்புவோம். (20 : 124) என்ற வசனத்தில் (சொல்லப்பட்ட தண்டனை) மண்ணறை வேதனையைப் பற்றியதாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : இப்னு ஹிப்பான் (3174)

எனது போதனையைப் புறக்கணிப்பவனுக்கு நெருக்கடியான வாழ்க்கை உண்டு. அவனை கியாமத் நாளில் குருடனாக எழுப்புவோம். (20 : 124) என்ற இந்த வசனம் எது குறித்து இறங்கியது என்று உங்களுக்குத் தெரியுமா? நெருக்கடியான

வாழ்க்கை என்றால் எது என்றும் உங்களுக்குத் தெரியுமா? என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மக்களிடம்) கேட்டார்கள். அதற்கு மக்கள் அல்லாஹ்வும் அவனது தூதருமே மிக அறிந்தவர்கள் என்று கூறினார்கள். இறைமறுப்பாளன் அவனுடைய மண்ணறையில் வேதனை செய்யப்படுவதை (இவ்வசனம் குறிப்பிடுகிறது). எனது உயிர் எவனது கைவசத்தில் இருக்கிறதோ அந்த அல்லாஹ்வின் மீதாணையாக அவனுக்கெதிராக தொண்ணூற்று ஒன்பது பாம்புகள் சாட்டப்படும். அந்த பாம்புகளைப் பற்றி உங்களுக்குத் தெரியுமா? அவை தொண்ணூற்று ஒன்பது பாம்புகளாகும். ஒவ்வொரு பாம்புகளுக்கும் ஏழு தலைகள் இருக்கும். மறுமை நாள்வரை அவனுடைய உடம்பில் (விஷக்காற்றை)அவை ஊதிக் கொண்டும் அவனை தீண்டிக் கொண்டும் உராய்ந்து கொண்டும் இருக்கும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : முஸ்னது அபீயஃலா (6504)

## புறம் பேசுதல்

இன்றைக்கு பாவம் என்று உணரப்பட்டு அதிகமானோரால் செய்யப்பட்டு வரும் குற்றம் புறம் பேசுவதாகும். புறம் பேசியதற்காக ஒருவன் மண்ணறையில் தண்டிக்கப்படுகின்றான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருந்த இருவருடைய கப்றுகளைக் கடந்து நபி (ஸல்) அவர்கள் சென்றபோது, ''இவ்விருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள்; ஆனால் மிகப் பெரும்பாவத்திற்காக வேதனை செய்யப்படவில்லை. ஒருவர் சிறுநீர் கழிக்கும் போது மறைக்காதவர்; இன்னொருவர் கோள் சொல்லித் திரிந்தவர்'' என்று கூறிவிட்டு, ஈரமான ஒரு பேரீச்ச மட்டையை இரண்டாகப் பிளந்து இரு கப்றுகளிலும் ஒவ்வொன்றை நட்டார்கள். தோழர்கள், ''அல்லாஹ்வின் தூதரே!

ஏன் இவ்வாறு செய்கின்றீர்கள்?'' என்று கேட்டதும், ''இவ்விரண்டின் ஈரம் காயாதவரை இவர்களின் வேதனை குறைக்கப் படக் கூடும்'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)
நூல் : புகாரி (1361)

## சிறுநீர் கழித்துவிட்டு சுத்தம் செய்யாமல் இருத்தல்

மலமும், சிறுநீரும் மனிதனின் உடம்பிலிருந்து வெளிப்படும் அசுத்தங்களாகும். ஆனால் மலம் கழித்தால் மக்கள் சுத்தம் செய்கிறார்கள். சிறுநீர் கழித்தால் சுத்தம் செய்யாமல் விட்டு விடுகிறார்கள்.

சிறுநீரை தூய்மையான தண்ணீரைப் போன்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். தூய்மைப்படுத்திக் கொள்வதற்கு நீர் கிடைத்தாலும் நீரைப் பயன்படுத்தி சுத்தம் செய்கிற அளவிற்கு சிறுநீர் ஒன்றும் பெரிய அசுத்தமில்லை என்று கருதுகிறார்கள்.

ஆனால் உண்மையில் மலத்திலிருந்து துர்வாடை கிளம்புவது போல் சிறுநீரிலிருந்தும் துர்வாடை கிளம்புகிறது. மலத்தில் நோய்க் கிருமிகள் இருப்பதுபோல் சிறுநீரிலும் நோய்க் கிருமிகள் இருக்கிறது.

எனவேதான் இவ்விரண்டு அசுத்தங்களையும் சுத்தம் செய்ய வேண்டும் என்று இஸ்லாம் வலியுறுத்துகிறது. சுத்தம் செய்யா விட்டால் மண்ணறையில் தண்டனை கிடைக்கும் என்று எச்சரிக் கிறது. சிறுநீர் விஷயத்தில் மட்டுமில்லாமல் எல்லாக் காரியங்களிலும் நாம் சுத்தத்தை கடைபிடிக்க வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இரண்டு கப்ருகளைக் கடந்து சென்றார்கள். அப்போது (கப்ரில் உள்ள) இவ்விருவரும் வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

''இவ்விருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள்; ஆனால் மிகப் பெரும்பாவத்திற்காக வேதனை செய்யப்படவில்லை. ஒருவர் சிறுநீர் கழிக்கும் போது மறைக்காதவர்; இன்னொருவர் கோள் சொல்லித் திரிந்தவர்'' என்று கூறிவிட்டு, ஈரமான ஒரு பேரீச்ச மட்டையை இரண்டாகப் பிளந்து இரு கப்றுகளிலும் ஒவ்வொன்றை நட்டார்கள். தோழர்கள், ''அல்லாஹ்வின் தூதரே! ஏன் இவ்வாறு செய்கின்றீர்கள்?'' என்று கேட்டதும், ''இவ் விரண்டின் ஈரம் காயாதவரை இவர்களின் வேதனை குறைக்கப் படக் கூடும்'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் : புகாரி (1361)

# திருட்டு

திருடப்படுகின்ற பொருள் திருடியவனுக்கு நெருப்பாக மாறும் என்று நபி (ஸல்) அவர்கள் பின்வரும் சம்பவத்தில் உணர்த்தி யுள்ளார்கள்.

நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் 'கைபர்' தினத்தன்று (வெற்றி கண்டு) புறப்பட்டோம். நாங்கள் (அந்தப் போரில்) பொன்னையோ, வெள்ளியையோ போர்ச் செல்வமாகப் பெறவில்லை. (அவையல்லாத கால் நடைச்) செல்வங்கள், ஆடைகள், உபயோகப் பொருள்கள் ஆகியவற்றையே பெற்றோம். 'பனுள்ளுபைப்' எனும் குலத்தாரில் ரிஃபாஆ பின் ஸைத் என்ற ஒருவர் அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு 'மித்அத்' எனப்படும் ஓர் அடிமையை அன்பளிப்பாக வழங்கினார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் 'வாதில் குரா' எனும் இடத்தை நோக்கிச் சென்று, அந்த இடத்திற்கு வந்து சேர்ந்தபோது 'மித்அம்' என்ற அந்த அடிமை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் சிவிகையை (ஒட்டகத்திலிருந்து)

இறங்கிக் கொண்டிருந்தார். அப்போது எங்கிருந்தோ வந்த அம்பு ஒன்று மித்அமை(த் தாக்கி)க் கொன்று விட்டது. இதைக் கண்ட மக்கள் "அவருக்குச் சொர்க்கம் கிடைத்து விட்டது; வாழ்த்துக்கள்'' என்றனர். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அப்படிச் சொல்லாதீர்கள். என்னுயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீது சத்தியமாக! போர்ச் செல்வங்கள் பங்கிடப்படும் முன்பே அவற்றிலிருந்து கைபர் அன்று அவர் எடுத்துக் கொண்டு விட்ட போர்வை அவர் மீது நரக நெருப்பாக எரிந்து கொண்டிருக்கிறது'' என்று கூறினார்கள். இதை மக்கள் செவியேற்ற போது, ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் 'ஒரு செருப்பு வாரை' அல்லது 'இரு வார்களைக்' கொண்டு வந்தார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "(இதைத் திருப்பித் தராமல் இருந்திருந்தால் இது சாதாரண நெருப்பு வாராக இருந்திராது. மாறாக) 'நெருப்பு வாராக' அல்லது 'இரு நெருப்பு வார்களாக' மாறியிருக்கும்'' என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி),
நூல் : புகாரி (6707)

## அவதூறு கூறுதல், வட்டி வாங்குதல், விபச்சாரம் புரிதல்

அவதூறு கூறுதல், குர்ஆனைப் புறக்கணித்தல், விபச்சாரம் செய்தல், வட்டி வாங்குதல் போன்ற குற்றங்களுக்கும் மண்ணறையில் தண்டனை தரப்படுவதாக நபி (ஸல்) அவர்களுக்கு கனவின் மூலம் காட்டப்பட்டது.

நபி (ஸல்) அவர்கள் தொழுது முடித்ததும் எங்களை நோக்கி 'இன்றிரவு உங்களில் யாரும் கனவு கண்டீர்களா?' என்று கேட்கும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள். யாராவது கனவு கண்டு அதைக் கூறினால் "அல்லாஹ் நாடியது நடக்கும்'' என்று கூறுவார்கள்.

இவ்வாறே ஒருநாள், ''உங்களில் யாரும் இன்றிரவு கனவு கண்டீர்களா?'' என்று கேட்டதும் நாங்கள் ''இல்லை'' என்றோம். அவர்கள், ''நான் இன்றிரவு ஒரு கனவு கண்டேன்; அதில் இருவர் என்னிடம் வந்து எனது கைகளைப் பிடித்து என்னைப் புனித பூமியொன்றுக்கு அழைத்துச் சென்றனர். அங்கே ஒருவர் உட்கார்ந்திருந்தார். நின்று கொண்டிருந்த இன்னொருவரின் கையில் இரும்பாலான கொக்கிகள் இருந் தன. அவர் அதைக் கொண்டு உட்கார்ந்திருப்பவரின் கீழ்த் தாடையின் ஒருபுறம் குத்த அது அவருடைய பிடரி வழியாக வெளியேறியது. இப்படியே தாடையின் இன்னொரு புறமும் செய்தார். இதற்குள் தாடையின் முதற்பகுதி ஒழுங்காகி விட்டது. பின்பு இது குத்தப்பட்டதும் அது பழைய நிலையை அடைந்தது. உடனே நான் 'இது என்ன?' என்று கேட்டேன். அதற்கு அவ்விருவரும் 'நடங்கள்' என்றனர். அப்படியே நடந்த போது அங்கு ஒரு மனிதர் மல்லாந்து படுத்திருந்தார். அவரது தலைமாட்டில் பெரிய பாறையுடன் நிற்கும் இன் னொருவர், அதைக் கொண்டு அவரது தலையை உடைத்தார். அவ்வாறு உடைக்கும் போது பாறை உருண்டு ஓடி விட்டது. அந்தப் பாறையை அவர் எடுத்து வருவதற்குள் சிதைந்த தலை பழைய நிலைக்கு மாறி விட்டது. மீண்டும் வந்து உடைத்தார். உடனே 'இவர் யார்?' என நான் கேட்டேன். அதற்கு அவ்விருவரும் 'நடங்கள்' என்றனர். எனவே நடந் தோம். அங்கு அடுப்பு போன்ற ஒரு பொந்து இருந்தது. அதன் மேற்பாகம் குறுகலாகவும், அடிப்பாகம் விசாலமானதாகவும் இருந்தது. அதற்குக் கீழ் நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. நெருப்பின் சூடு அதிகமாகும் போது அந்த பொந்தின் அடியில் உள்ளவர்கள் வெளியேற முயன்றார்கள். (ஆனால் மேற்பகுதி குறுகலாயிருப்பதால் வெளியேற முடியவில்லை.) நெருப்பு அணைந்ததும் பழைய (கீழ்ப்) பகுதிக்கு வந்து விட்டார்கள். அதில் ஆண்களும், பெண்களும் நிர்வாணமாகக் கிடந்தார் கள். நான் 'இவர்கள் யார்?' எனக் கேட்டேன். அதற்கும் அவர் கள் 'நடங்கள்' எனக் கூறிடவே மேலும் நடந்து ஓர் இரத்த

ஆற்றின் பக்கம் வந்தோம். அந்த ஆற்றின் நடுப்பகுதியில் ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவருக்கு முன்பாக கற்கள் கிடந்தன. ஆற்றின் ஓரத்தில் இன்னொருவர் நின்று கொண்டிருந்தார். அந்த மனிதர் ஆற்றை விட்டு வெளியெற முயலும் போது இவர் அவரது வாயில் கல்லை எறிந்தார். அக்கல் பட்டதும் கரையேற முயன்றவர் முன்னிருந்த இடத்திற்கு தள்ளப்பட்டார். இவ்வாறே அவர் வெளியேற முயலும் போதெல்லாம் இவர் அவரது வாயில் கல்லால் அடிக்க, அவர் மீண்டும் பழைய இடத்திற்கே சென்றார். அப்போது நான் 'என்ன இது?' எனக் கேட்டேன். அதற்கு அவ்விருவரும் 'நடங்கள்' எனக் கூறிடவே நடந்து ஒரு பசுமையான பூங்காவுக்கு வந்தோம். நான் இருவரிடமும் "இரவு முழுவதும் என்னை நீங்கள் சுற்றிக் காண்பித்தீர்களே, அப்போது நான் கண்டவற்றைப் பற்றிய விபரங்களைச் சொல்லுங்கள்!" எனக் கேட்டேன். அதற்கு இருவரும் "ஆம், முதல் தாடை சிதைக்கப்பட்டவரைப் பார்த்தீரே! அவர் பெரும் பொய்யர். அவர் பொய் பேச அது பலர் வழியாக உலகம் முழுவதையும் அடையும். நீர் பார்த்த அத்தண்டனை அவருக்கு மறுமை நாள் வரை கொடுக்கப்படும். அடுத்து தலை உடைக்கப் பட்ட நிலையில் பார்த்தீரே! அவருக்கு அல்லாஹ் குர்ஆனை கற்றுக் கொடுத்ததும் அதைப் பயன்படுத்தாமல் இரவில் தூங்கி விட்டார்; பகலில் அதை செயல்படுத்தவில்லை. எனவே அத்தண்டனை அவருக்கு மறுமை நாள் வரை கொடுக்கப்படும். அடுத்து ஒரு பொந்தில் சிலரைப் பார்த் தீரே! அவர்கள் விபச்சாரத்தில் ஈடுபட்டவர்கள். (இரத்த) ஆற்றில் சிலரைப் பார்த்தீரே! அவர்கள் வட்டி வாங்கித் தின்ற வர்கள் என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : சமுரா பின் ஜுன்துப் (ரலி),
நூல் : புகாரி (1386)

மேலுள்ள குற்றங்களை செய்தவர்களுக்கு மறுமை நாள் வரை தண்டனை தரப்படும் என்று ஹதீஸில் கூறப்பட்டுள்ளது. மறுமை

நாளிற்கு முன்னால் உள்ள மண்ணறை வாழ்க்கையைப் பற்றித்தான் இச்சம்பவம் விவரிக்கிறது என்பதை இதன் மூலம் அறிந்து கொள்ளலாம்.

## வாங்கிய கடனை ஒப்படைக்காமல் இருத்தல்

வாங்கிய கடனை உரியவரிடத்தில் முறையாக ஒப்படைக்கா விட்டால் அது பெரும் குற்றமாகும். கடனை அடைக்காமல் இறந்து விட்டால் இறந்தவரின் உறவினர்கள் அக்கடனை அடைக்க வேண்டும். இல்லாவிட்டால் மரணத்திற்குப் பிறகு கிடைக்கும் பாக்கியங்களை மரணித்தவரால் அனுபவிக்க முடியாத துர்பாக்கிய மான நிலை ஏற்படும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். இறை நம்பிக்கை யாளரின் ஆத்மா அவர் வாங்கிய கடன் காரணத்தால் அவர் சார்பில் அது நிறைவேற்றப்படுகிற வரை (அந்தரத்தில்) தொங்கவிடப்படுகிறது.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி),
நூல் : திர்மிதி (999)

ஒரு நாள் நபி (ஸல்) அவர்கள் தொழுது விட்டு இங்கே இன்னாருடைய கூட்டத்தாரில் யாராவது (புதைக்கப்பட்டார் களா?) என்று மூன்று முறை கேட்டார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு யாரும் பதில் கூறவில்லை. இறந்து விட்ட இந்த மனிதர் தன் மீதிருந்த கடன் காரணத்தால் சொர்க்கத்தை விட்டும் தடுக்கப்பட்டு விட்டார். நீங்கள் விரும்பினால் அவருக்கு பதிலாக நீங்கள் அவரது கடனை நிறைவேற்றுங்கள். இல்லையென்றால் அல்லாஹ்வின் வேதனையின்பால் அவரை ஒப்படைத்துவிடுங்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர் : சமுரா பின் ஜுன்துப் (ரலி),
நூல் : மஸானீது ஃபிராஸ் (16)

## நல்லோர்களின் மண்ணறை வாழ்க்கை

### சந்தோஷமான செய்தி கூறப்படும்

நல்லவர்கள் மரணிக்கும் போது வானவர்கள் சந்தோஷமான வார்த்தைகளை அவர்களிடம் கூறுவார்கள். மரியாதையுடன் நடத்தப் படுவார்கள். சொர்க்கம் பரிசாகக் கிடைக்கப் போகிறது என்ற சுபச் செய்தியை மரணிக்கும் தருவாயில் வானவர்கள் கூறுவார்கள். எனவே தனது நிலை என்னவாகுமோ என்ற கவலை நல்லவர் களுக்கு இருக்காது. அவர்கள் நிம்மதியுடனும், சந்தோஷத்துடனும் மண்ணறை வாழ்க்கைக்குள் பிரவேசிப்பார்கள்.

அமைதியுற்ற உயிரே! திருப்தியோடும் (இறைவனால்) திருப்தி கொள்ளப்படும் உமது இறைவனிடம் செல்வாயாக! எனது அடியார்களில் சேர்ந்து கொள்வாயாக! எனது சொர்க்கத் தில் நுழைவாயாக! (எனக் கூறப்படும்.)

அல்குர்ஆன் (89 : 27)

''எங்கள் இறைவன் அல்லாஹ்வே'' எனக் கூறி பின்னர் உறுதியாகவும் இருந்தோரிடம் வானவர்கள் இறங்கி ''அஞ்சா தீர்கள்! கவலைப்படாதீர்கள்! உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட சொர்க்கம் பற்றிய நற்செய்தியைப் பெற்றுக் கொள்ளுங்கள்!'' எனக் கூறுவார்கள்.

இவ்வுலக வாழ்க்கையிலும், மறுமையிலும் நாங்கள் உங் கள் உதவியாளர்கள். நிகரற்ற அன்புடைய மன்னிப்பவனின் விருந்தோக நீங்கள் ஆசைப்படுபவை உங்களுக்குக் கிடைக் கும். நீங்கள் கேட்பதும் உங்களுக்கு உண்டு என்றும் கூறுவர்.

அல்குர்ஆன் (41: 30)

இன்பமான வாழ்வு உறுதி செய்யப்பட்டு விட்டதால் விரைவாக தன்னை அடக்கம் செய்யுமாறு நல்லவர் விரும்புவார். ஆனால் தீயவரோ தனக்குக் கிடைத்த கொடூரமான வாழ்வை நினைத்து மண்ணறைக்குள் அடக்கி விட வேண்டாம் என்று அலறிக் கொண்டிருப்பார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். பிரேதம் (பெட்டியில்) வைக்கப்பட்டு அதை ஆண்கள் தங்கள் தோள்களில் தூக்கிச் செல்லும் போது அந்தப் பிரேதம் நல்லறங்கள் புரிந்ததாக இருப்பின், ''என்னை விரைந்து கொண்டு செல்லுங்கள்'' என்று கூறும். அது நல்லறங்கள் புரியாத்தாக இருப்பின், ''கைசேதமே! என்னை எங்கே கொண்டு செல்கிறீர்கள்?'' என்று கூறும். இவ்வாறு கூறப்படும் செய்தியை மனிதனைத் தவிர அனைத்தும் செவியுறும். மனிதன் அதை செவியுற்றால் மயங்கி விழுந்து விடுவான்.

அறிவிப்பவர் : அபூஸயீத் அல்குத்ரீ (ரலி)
நூல் : புகாரி (1316)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ''யார் அல்லாஹ்வை சந்திக்க விரும்புகிராறோ, அவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான். யார் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுக்கிறாரோ அவரைச் சந்திப்பதை அல்லாஹ்வும் வெறுக்கிறான்'' என்று சொன்னார்கள். அப்போது நான், ''அல்லாஹ்வின் தூதரே! மரணத்தை வெறுப்பதையா (நீங்கள் சொல்கிறீர்கள்)? அவ்வாறாயின், (மனிதர்களாகிய) நாங்கள் அனைவருமே மரணத்தை வெறுக்கத்தானே செய்வோம்?'' என்று கேட்டேன்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ''(அல்லாஹ்வைச் சந்திப்பது என்பதற்கு பொருள்) அதுவல்ல. மாறாக, இறைநம்பிக்கையாளருக்கு (மரண வேளையில்) இறைவன் கருணை புரியவிருப்பதாகவும் அவரைப் பற்றி அல்லாஹ் திருப்தி அடைந்திருப்பதாகவும் அவருக்கு சொர்க்கத்தை வழங்கவிருப்பதாவும் நற்செய்தி கூறப்படும். அப்போது அவர் அல்லாஹ்வைச் சந்திக்க விரும்புவார். இறைமறுப்பாளருக்கு, (மரண வேளை நெருங்கும் போது) அல்லாஹ் வழங்கவிருக்கும் வேதனை குறித்தும் அவர்மீது அல்லாஹ் கோபம் கொண்டிருப்பது குறித்தும் அறிவிக்கப் படும். அப்போது அவர் அல்லாஹ்வைச் சந்திப்பதை வெறுப்பார்.

அல்லாஹ்வும் அவரைச் சந்திப்பதை வெறுப்பான்'' என்று (விளக்கம்) சொன்னார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)
நூல் : முஸ்லிம் (5208)

## நல்லவர்களுக்கு வானவர்களின் வரவேற்பு

நல்லவர்களுக்கு மண்ணறை வாழ்வில் அழகான வரவேற்பு வானவர்களால் கொடுக்கப்படுகிறது.

மதீனாவாசி ஒருவருடைய ஜனாஸாவைப் பின்தொடர்ந்து நபி (ஸல்) அவர்கள் சொன்றார்கள். ஜனாஸா அடக்கம் செய்யப்பட்டதும் நபியவர்கள் கப்ருக்கருகில் அமர்ந்தார்கள். நாங்களும் அவரைச் சுற்றி அமர்ந்தோம். நபி (ஸல்) அவர்கள் சிறிய கம்பு ஒன்றினால் நிலத்தைக் கீறிக் கொண்டிருந்தார் கள். திடீரென தன் தலையை உயர்த்தி கப்ருடைய வேதனையை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடிக் கொள்ளுங்கள் என்று மூன்று தடவை கூறினார்கள். பின்பு மரணத்தருவாயிலுள்ள ஒரு இறைநம்பிக்கையாளனுடைய நிலை பற்றிக் கூறினார்கள்.

மூமினான ஒரு அடியான் உலகத் தொடர்புகளை துண்டித்து விட்டு மறுமையை எதிர்நோக்கிக் கொண் டிருக்கும் போது சூரிய ஒளிக்கொப்பான பிராகாசமான முகத்துடன் வானிலிருந்து சில வானவர்கள் அவனிடம் வருவார்கள். அவர்கள் தங்களுடன் சுவர்க்கத்து துணிகளை யும், சுவர்க்கத்து நறுமணங்களையும் வைத்துக் கொண்டு அவனுடைய பார்வைக்கு எட்டும் தூரத்தில் இருப்பார்கள்.

அப்போது உயிரைக் கைப்பற்றும் வானவர் வந்து அவ னருகில் அமருவார். அவனை நோக்கி நல்ல ஆத்மாவே! நீ இந்த உடலிலிருந்து வெளியேறி அல்லாஹ்வின் மன்னிப்பை

நோக்கியும் அவனுடைய பொருத்தத்தை நோக்கியும் செல் என்று கூறுவார். தோல் பையொன்றிலிருந்து நீர் வழிந்து விடுவது போன்று அந்த ஆத்மா வெளியேறிவிடும். அவர் அதனை எடுத்துச் செல்வார்.

அதனை அவர் எடுத்ததும் அருகிலுள்ள மலக்குகள் உடனே சுவர்க்கத்து துணியிலும் நறுமணத்திலும் அதனை வைத்து விடுவார்கள். அதிலிருந்து கஸ்தூரி வாடை வீசும். அந்த மலக்குகள் அதனை சுமந்தவர்களாக முதலாவது வானத்தை நோக்கிச் சென்று வானத்தை திறந்து விடுமாறு அதிலுள்ள மலக்குகளிடம் கூறுவார்கள்.

அம்மலக்குகள் வானத்தைத் திறந்து அந்த ஆத்மாவை வரவேற்பார்கள். ஒவ்வொரு வானத்திலும் இவ்விதமே நடைபெறும். ஏழாவது வானத்தை கடந்து சென்றதும் அல்லாஹ் ஆத்மாவை சுமந்து சென்ற மலக்குகளை நோக்கி எனது இந்த அடியானுடைய செயல்களை இல்லிய்யீனிலே (இறைநம்பிக்கையாளர்களின் உயிர்கள் இருக்குமிடம்) பதிவு செய்து விட்டு பூமியிலுள்ள அவனது உடலில் அவனுடைய ஆத்மாவை சேர்த்து விடுங்கள் என்று கூறுவான்.

அறிவிப்பவர் : பராஉ பின் ஆஸிப் (ரலி)
நூல் : அஹ்மத் (17803)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். இறை நம்பிக்கையாளரின் உயிர் பிரியும் போது அதை இரு வானவர்கள் எடுத்துக் கொண்டு (வானுலகிற்கு) ஏறிச் செல்கிறார்கள்.

அப்போது வானுலகவாசிகள் (வானவர்கள்), "ஒரு நல்ல ஆன்மா பூமியிலிருந்து வந்திருக்கிறது. அல்லாஹ் உனக்குப் பேரருள் புரிவானாக! நீ குடியிருந்து வந்த உடலுக்கும் பேரருள் புரிவானாக!" என்று பிரார்த்திப்பார்கள். பிறகு அந்த உயிர் வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்விடம்

கொண்டு செல்லப்படுகிறது. பிறகு அல்லாஹ், ''இதை இறுதி தஹ்ணை வரை (மறுமைநாள் வரை தங்க வைப்பதற்காகக்) கொண்டு செல்லுங்கள்!'' என்று கூறுவான்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : முஸ்லிம் (5510)

## இலேசான விசாரணை

அடக்கம் செய்யப்பட்டவுடன் மரணித்தவருக்கு விசாரணை ஆரம்பித்து விடுகிறது. வானவர்கள் மிகச் சில கேள்விகளை மட்டும் கேட்பார்கள். நல்லடியாராக இருந்தால் இலகுவாக கேள்விகளுக்கு பதில் கூறிவிடுவார். பிறகு அவருக்கு இன்பமான வாழ்வு ஆரம்பித்து விடுகிறது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். இரண்டு வானவர்கள் இறந்தவரிடம் வந்து அவரை எழுந்திருக்கச் செய்து அமர வைப்பார்கள். அவர்கள் அந்த அடியானை நோக்கி உனது இறைவன் யார்? என்று கேட்பார்கள். அதற்கு அவர் எனது இறைவன் அல்லாஹ் என்று கூறுவார். பிறகு உனது மார்க்கம் என்ன? என்று கேட்பார்கள். அதற்கு அவர் எனது மார்க்கம் இஸ்லாம் என்று கூறுவார். உங்களிடத்தில் அனுப்பப்பட்ட இவர் யார்? என்று வானவர்கள் கேட்பார்கள். அதற்கு அவர், இவர் அல்லாஹ்வின் தூதர் ஆவார் என்று கூறுவார். இதை நீ எவ்வாறு அறிந்து கொண்டாய்? என்று கேட்பார்கள். அதற்கு அவர் அல்லாஹ்வின் வேதத்தை ஓதினேன். அதனை விசுவாசம் கொண்டேன். அதனை உண்மைப்படுத்தினேன் என்று கூறுவார்.

எனது அடியான் உண்மை கூறிவிட்டான். அவனுக்காக சொர்க்கத்தின் விரிப்புகளை விரித்து விடுங்கள். சுவர்க்கத் தின் ஒரு கதவை அவனுக்காகத் திறந்து விடுங்கள் என்று ஒருவர் வானிலிருந்து அப்போது கூறுவார். அவனுடைய கண்பார்வை எட்டும் அளவிற்கு அவனுடைய கப்ரு விசாலமாக்கப்படும்.

அப்போது நறுமணம் கமழ அழகிய ஆடை அணிந்து வசீகரமான தோற்றத்துடன் ஒரு மனிதர் அவரிடத்தில் வருவார். அம்மனிதர் அவரை நோக்கி உனக்கு வாக்களிக்கப்பட்ட உனக்கு மகிழ்வூட்டக்கூடிய நன்னாள் இதுவாகும் என்று கூறுவார்.

அந்த இறைநம்பிக்கையாளர் அம்மனிதரை நோக்கி நீ யார்? என்று கேட்பார். அதற்கு அம்மனிதர் நான்தான் (நீ உலகில் செய்து வந்த) உனது நல்ல காரியங்கள் என்று கூறுவார். அப்போது அந்த இறைநம்பிக்கையாளன் இறைவா! நான் தேடி வைத்துள்ள செல்வமான (நன்மையையும்) எனது குடும்பத்தினர்களையும் சென்றடைய மறுமைநாளை இப்போதே ஏற்படுத்திவிடு என்று கூறுவார். மரண வேளையின் போது இறைநம்பிக்கையாளரின் நிலை இதுவாகும்.

அறிவிப்பவர் : பராஉ பின் ஆஸிப் (ரலி)
நூல் : அஹ்மத் (17803)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். ஓர் அடியாரின் உடலை சவக்குழியில் அடக்கம் செய்து விட்டு, அவருடைய தோழர்கள் திரும்பும் போது அவர்களது செருப்பின் ஓசையை பிரேதம் (மய்யித்) செவியேற்கும். அதற்குள் இரண்டு வானவர்கள் அவனிடம் வந்து, அவனை எழுப்பி உட்கார வைத்து, ''முஹம்மத் எனும் இந்த மனிதரைப் பற்றி நீ என்ன கருதிக் கொண்டிருந்தாய்?'' எனக் கேட்பர். இதற்கு, ''இவர் அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமாவார் என நான் சாட்சியம் கூறுகின்றேன்'' என்பர். பிறகு ''(நீ கெட்டவனாக இருந்திருந்தால் நரகத்தில் உனக்குக் கிடைக்கவிருந்த) தங்குமிடத்தைப் பார்! (நீ நல்லவனாக இருப்பதால்) அல்லாஹ் இதற்குப் பதிலாக உனக்கு சொர்க்கத்தில் தங்குமிடத்தை ஏற்படுத்தியுள்ளான்'' என்று அவரிடம் கூறப்பட்டதும் அவர் அவ்விரண்டையும் ஒரே நேரத்தில் காண்பர்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)
நூல் : புகாரி (1338)

இறை நம்பிக்கையாளரின் ஆத்மா சொர்க்கத்து மரத்தில் வாழும் பறவையாக (மாற்றப்படும்.) மறுமைநாளில் அவரது உடம்புடன் அல்லாஹ் அவரை எழுப்புகின்ற வரை (சொர்க்கத்துப் பறவையாகவே) இருப்பார்.

அறிவிப்பவர் : கஃப் பின் மாலிக் (ரலி)

நூல் : நஸயீ (2046)

## நெருக்கத்திற்குப் பிறகு விசாலமாக்கப்படும்

நல்லவராக இருந்தாலும், தீயவராக இருந்தாலும் இறந்தவரை கப்ரில் வைத்தவுடன் மண்ணறை அவரை ஒரு முறை நெருக்கும். மரணித்தவன் கெட்டவனாக இருந்தால் விலா எலும்புகள் ஒன்றோடொன்று கோர்த்துக் கொள்கின்ற அளவிற்கு அது தொடர்ந்து நெருக்கிக் கொண்டே இருக்கும். நல்லவனாக இருந்தால் தொடர்ந்து நெருக்காமல் அவனை விட்டுவிடுகிறது. பிறகு அவருடைய மண்ணறை விசாலமாக்கப்பட்டு அவர் நெருக்கடியில்லாமல் நிம்மதியாக மண்ணறை வாழ்வை அனுபவிப்பார்.

சிறந்த நபித்தோழரான சஃத் பின் முஆத் என்ற நபித்தோழரையும் மண்ணறை நெருக்கியது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மண்ணறை நெருக்கும் பண்புடையது. அதனுடைய நெருக்கத்திலிருந்து யாரேனும் ஒருவர் தப்பிப்பதாக இருந்தால் சஃத் பின் முஆத் அதிலிருந்து தப்பித்திருப்பார். (ஆனால் அவரையும் மண்ணறை நெருக்கியது.)

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : தஹதீபுல் ஆஸார் (797)

உங்களுடன் இருந்த இந்த மனிதர் குறித்து நீ என்ன சொல்லிக் கொண்டிருந்தாய்? என்று நபி (ஸல்) அவர்களைப் பற்றி (நல்லவரிடம்) கேட்கப்படும். அதற்கு அவர் இறைவனின் தூதர் என்று நான் நம்பினேன். அவர் எங்களிடத்தில் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்தார். அவர் உண்மை

யாளர் என்று கருதி அவரை நாங்கள் பின்பற்றினோம் என்று கூறுவார். அதற்கு நீ உண்மையே கூறினாய். இவ்வாறே நீ வாழ்ந்து மரணித்தாய். இதே நிலையிலேயே அல்லாஹ் நாடினால் நீ எழுப்பப்படுவாய் என்று அவரிடம் கூறப்படும். பிறகு அவருடைய பார்வை எட்டுகின்ற அளவிற்கு அவருடைய கப்ரு விசாலமாக்கப்படும்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : தப்ரானீ பாகம்:3, பக்கம்:105

## இருள் அகற்றப்பட்டு ஒளி பாய்ச்சப்படும்

பொதுவாக மண்ணறைகளில் இருள் சூழ்ந்திருக்கும். நல்லவர்களின் மண்ணறைகளில் இருள் அகற்றப்பட்டு தேவையான ஒளி கொடுக்கப்படும். எனவே நல்லவர்கள் எந்த விதமான அச்சமும் இல்லாமல் நிம்மதியாக மண்ணறை வாழ்வைக் கழிப்பார்கள். இதைப் பின்வரும் ஹதீஸ்களிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

(மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலைக் கூட்டப் பெருக்குபவராக இருந்த கறுத்த "பெண்" அல்லது "இளைஞர்" ஒருவரைக் காணாமல் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் விசாரித்தார்கள். "அவர் இறந்து விட்டார்" என மக்கள் தெரிவித்தனர். "நீங்கள் எனக்குத் தெரிவித்திருக்கக் கூடாதா?" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அவர் (இறந்த) விஷயத்தை மக்கள் அற்பமாகக் கருதி விட்டனர் போலும். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், "அவரது மண்ணறையை எனக்குக் காட்டுங்கள்" என்று கூறினார்கள். மக்கள் அதைக் காட்டியதும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அங்கு (சென்று) அவருக்காக (இறுதித்) தொழுகை நடத்தினார்கள். பிறகு "இந்த அடக்கத்தலங்கள் அவற்றில் வசிப்போருக்கு இருள் மண்டிக் காணப்படுகின்றன. அல்லாஹ், எனது தொழுகையின் மூலம் அவற்றில் அவர்களுக்கு வெளிச்சத்தை ஏற்படுத்துவான்" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : முஸ்லிம் (1742)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: இறை நம்பிக்கையாளன் மண்ணறையில் பசுமையான தோட்டத்தில் இருப்பார். எழுபது முழம் வரைக்கும் அவருடைய மண்ணறை விசாலமாக்கப்படும். பௌர்ணமிஇரவில் சந்திர னின் ஒளியைப் போல் அவருக்கு வெளிச்சம் தரப்படும்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : முஸ்னத் அபீ யஃலா (6504)

மரணித்தவரின் மண்ணறையை விசாலமாக்குமாறும் ஒளிகொடுக்குமாறும் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்துள்ளார்கள். இதன் மூலம் நல்லவர்களுக்கு மண்ணறையில் ஒளி தரப்படுகிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

(என் முதல் கணவர்) அபூசலமாவின் (இறுதி நாளில் அவரது) பார்வை நிலைகுத்தி நின்ற போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வந்து, அவருடைய கண்களை மூடி விட்டார்கள். பிறகு, ''உயிர் கைப்பற்றப்படும் போது பார்வை அதைப் பின்தொடர்கிறது'' என்று கூறினார்கள். அப்போது அபூசலமாவின் குடும்பத்தார் சப்தமிட்டு (புலம்பி) அழுதனர். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், ''உங்களுக்காக நீங்கள் நல்லதைத் தவிர வேறெதையும் வேண்டாதீர்கள். ஏனெனில் நீங்கள் சொல்வதற்கு வானவர்கள் 'ஆமீன்' கூறுகின்றனர்'' என்று கூறினார்கள். மேலும் ''இறைவா! அபூசலமாவை மன்னிப்பாயாக! நல்வழி பெற்றவர்களிடையே அவரது தகுதியை உயர்த்துவாயாக! அவருக்குப் பிறகு எஞ்சியிருப்போருக்கு அவரை விடச் சிறந்த துணையை வழங்குவாயாக! அகிலத்தின் அதிபதியே! எங்களுக்கும் அவருக்கும் மன்னிப்பு அருள்வாயாக! அவரது மண்ணறையை (கப்று) விசாலமாக்குவாயாக! அதில் அவருக்கு வெளிச்சத்தை ஏற்படுத்துவாயாக!'' என்று பிரார்த்தித்தார்கள்.

அறிவிப்பவர் : உம்மு சலமா (ரலி)
நூல் : முஸ்லிம் (1678)

# அழகான மாளிகை

மண்ணறை வாழ்வு என்று சொல்லப்படுவதால் புதைக்கப்பட்ட இடத்தில் தான் இறந்தவர்கள் இருப்பதாக எண்ணிவிடக் கூடாது. மரணிக்கும் மக்களில் அதிகமானோரை மண்ணில் புதைப்பதால் மண்ணறை வாழ்க்கை என்று நாம் அழைக்கின்றோம். கடலில் மூழ்கி மீனிற்கு இரையாகியவர்கள்; தீயில் கருகி சாம்பலானவர்கள்; மிருகங்களால் வேட்டையாடப்பட்டு உண்ணப்பட்டவர்கள் இவர்களுக் கெல்லாம் கப்ரு என்பது கிடையாது. ஆனால் மண்ணில் புதைக்கப் பட்டவர்கள் சந்திக்கும் மறைமுகமான வாழ்வை இவர்களும் கண்டிப்பாக சந்திப்பார்கள்.

இறந்து விட்ட நல்லடியார்களுக்கு அற்புதமான அழகான வீடு தயார் செய்து தரப்படும். அங்கே அவர்கள் மண்ணறை வாழ்வு என்ற மறைமுகமான வாழ்வை இன்பமாகக் கழித்துக் கொண்டிருப்பார்கள். நபி (ஸல்) அவர்கள் மிஃராஜ் இரவின் போது நல்லவர்களுக்கு இப்படிப்பட்ட பாக்கியம் இருப்பதை உணர்ந்து கொண்டார்கள்.

பிறகு அவ்விருவரும் அம்மரத்தில் என்னை ஏற்றுக் கொண்டு போய் அங்கு ஒரு வீட்டில் பிரவேசிக்கச் செய்தார் கள். நான் இதுவரை இப்படி ஓர் அழகான வீட்டைப் பார்த்ததே யில்லை. அதில் சில ஆண்களும், வயோதிகர்களும், இளைஞர் கள், பெண்கள், சிறுவர்கள் ஆகியோரும் இருந்தனர். பிறகு அவ்விருவரும் அங்கிருந்து என்னை அழைத்து மரத்தில் ஏற்றி இன்னொரு மாளிகையில் பிரவேசிக்கச் செய்தனர். அது மிகவும் அழகானதும், சிறப்பானதுமாக இருந்தது. அதில் வயோதிகர்களும், இளைஞர்களும் இருந்தனர். பிறகு நான் இருவரிடமும், ''இரவு முழுவதும் என்னை நீங்கள் சுற்றிக் காண்பித்தீர்களே, அப்போது நான் கண்டவற்றைப் பற்றிய விபரங்களைச் சொல்லுங்கள்!'' எனக் கேட்டேன். அதற்கு இருவரும், ''ஆம்! நீர் நுழைந்த முதல் மாளிகை சராசரி மூமின் களின் இருப்பிடம். அடுத்த மாளிகையோ உயிர் தியாகிகளின் இருப்பிடம். நான் ஜிப்ரீல். இவர் மீக்காயீல்'' என்று கூறிவிட்டு,

''அப்போது உமது தலையை உயர்த்தும்!'' என்றனர். நான் எனது தலையை உயர்த்தியதும் எனக்கு மேற்புறம் மேகம் போல் இருந்தது. அப்போது இருவரும் ''இதுவே (மறுமை யில்) உமது இருப்பிடம்' என்றதும் நான், ''எனது இருப்பிடத் தில் என்னை நுழைய விடுங்களேன்'' என்றேன். அதற்கு இருவரும், 'உமது வாழ்நாள் இன்னும் மிச்சமிருக்கிறது; அதை நீர் இன்னும் பூர்த்தி செய்யவில்லை. எனவே அதனை நீர் பூர்த்தி செய்ததும் நீர் உமது இருப்பிடம் வருவீர்' என்றனர்'' என்று கூறினார்.

அறிவிப்பவர் : சமுரா பின் ஜுன்துப் (ரலி)
நூல் : புகாரி (1386)

## சொர்க்கம் எடுத்துக்காட்டப்படும்

நல்லடியார் சந்தோஷமாக மண்ணறை வாழ்வை கழிக்க வேண்டும் என்பதற்காக அடிக்கடி அவருக்கு சொர்க்கம் காட்டப்படும். அதைப் பார்த்து அவர் சந்தோஷம் அடைந்து கொண்டே இருப்பார்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். உங்களில் ஒருவர் இறந்து விட்டால் அவர் தங்குமிடம் அவருக்குக் காலையிலும் மாலையிலும் எடுத்துக்காட்டப்படும். அவர் சொர்க்கவாசியாக இருந்தால் சொர்க்கத்திலிருப்பதாக வும், நரகவாசியாக இருந்தால் நரகத்திலிருப்பதாகவும் (எடுத்துக்காட்டப்படும்.) மேலும், ''அல்லாஹ் மறுமை நாளில் உன்னை எழுப்புகின்றவரை இதுவே (கப்றே) எனது தங்குமிடம்'' என்றும் கூறப்படும்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் உமர் (ரலி)
நூல் : புகாரி (1379)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நல்லடியாருக்கு நரகத் தில் ஒரு வாசலைக் காட்டுங்கள் என்று கூறப்படும்.

நரகத்தின் ஒரு வாசல் அவருக்குக் காண்பிக்கப்பட்டு நீ அல்லாஹ்விற்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்திருந் தால் இதுதான் உனது இடமாக ஆகியிருக்கும். (ஆனால் நீ மாறு செய்யவில்லை. எனவே இதிலிருந்து தப்பித்து விட்டாய்.) என்று கூறப்படும். அப்போது அவர் மிகவும் சந்தோஷமும், பரவசமும் அடைவார். பிறகு இவருக்கும் சொர்க்கத்தின் ஒரு வாசலைத் திறந்து விடுங்கள் என்று கூறப்படும். சொர்க்கத் தின் வாசல் அவருக்காக திறக்கப்பட்டு இதுதான் அல்லாஹ் உனக்கு ஏற்படுத்திய உனது இடமாகும் என்று கூறப்படும். அப்போது அவர் சந்தோஷமும், பரவசமும் அடைவார்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : தப்ரானீ (2680)

## திருப்தியான வாழ்க்கை

உலக வாழ்வில் எவ்வளவுதான் இன்பங்களை மனிதன் அடைந் தாலும் திருப்தி அவனுக்குக் கிடைப்பதில்லை. இதனால் நிம்மதி யின்றி செல்வத்தைத் தேடிக் கொண்டே வாழ்நாளைக் கழித்து விடு கிறான். ஆனால் நல்லவர்களுக்கு மண்ணறை வாழ்க்கை என்பது திருப்திக்குரியதாகவும், சந்தோஷத்திற்குரியதாகவும் இருக்கும். சத்தியத்திற்காக உயிர் நீத்த நபித்தோழர்கள் இப்படிப்பட்ட நிலையை அடைந்துள்ளார்கள் என்பதை பின்வரும் சம்பவத்தின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

'பிஃரு மஊனா' (என்னுமிடத்தில் பிரச்சாரத்திற்காகச் சென்ற தமது) தோழர்களைக் கொன்றவர்களுக்குத் தீங்கு நேர - அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்த (பனூசுலைம் கோத்திரத்தைச் சேர்ந்த) ரிஅல், தக்வான் மற்றும் உஸய்யா ஆகிய குலத்தினருக்கு கேடு நேர- அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முப்பது காலை (தொழுகை) நேரங்களில் பிரார்த்தித்தார்கள். பிஃரு மஊனா

வில் கொல்லப்பட்டவர்களின் விஷயத்தில் குர்ஆன் வசனம் ஒன்று அருளப்பட்டது. அதை நாங்கள் ஓதி வந்தோம். பின்னாளில் அது (இறைவனால்) நீக்கப்பட்டு விட்டது. '' 'நாங்கள் எங்கள் இறைவனிடம் சென்று சேர்ந்து விட்டோம். அவன் எங்களைக் குறித்து திருப்தி அடைந்து விட்டான். நாங்கள் அவனைக் குறித்து திருப்தி அடைந்தோம்' என்று எங்கள் சமுதாயத்தாரிடம் தெரிவித்து விடுங்கள்'' என்பதே அந்த வசனம்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)

நூல் : புகாரி (2814)

# மண்ணறை வெற்றிக்கான காரணங்கள்

## இறை நம்பிக்கை வேண்டும்

அல்லாஹ்வை நம்புகின்ற விஷயத்தில் தவறிழைக்காமல் அவனை நம்ப வேண்டிய முறைப்படி நம்பியவர்களுக்கு வெற்றி கிடைப்பகதாக நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். எனவே அல்லாஹ்வுக்கு யாரையும் இணையாக ஆக்காமல் அவனை மட்டுமே விசுவாசம் கொண்டு வணங்கி வர வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். கப்ரில் ஒரு இறை நம்பிக்கையாளர் (முஃமின்) எழுப்பி உட்கார வைக்கப்பட்டதும் அவரிடம் (இரு வானவர்களைக்) கொண்டு வரப்ப(ட்டு கேள்வி கேட்கப்ப)டும். பிறகு (அவர்களிடத்தில்) அந்த இறைநம்பிக்கையாளர், ''அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை; முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனுடைய தூதராவார்கள்'' என சாட்சியம் கூறுவர். இதையே அல்லாஹ், ''எவர் நம்பிக்கை கொள்கிறாரோ அவர்களை இவ்வுலக வாழ்விலும், மறுமையிலும் உறுதியான சொல்லைக் கொண்டு அல்லாஹ் உறுதிப்படுத்துகின்றான்'' (14:27) எனக் குறிப்பிடுகிறான்.

அறிவிப்பவர் : பராஉ பின் ஆஸிப் (ரலி)

நூல் : புகாரி (1369)

# நற்காரியங்கள் செய்ய வேண்டும்

இறந்த பிறகு நாம் சம்பாதித்த செல்வமோ பெற்றெடுத்த குழந்தைகளோ நமக்குத் துணையாக வரமாட்டார்கள். மாறாக நாம் இந்த உலகில் செய்த நல்ல காரியங்கள் மட்டும் தான் நம்முடன் துணைக்கு வரும். எனவே நல்ல காரியங்களை அதிகமாகச் செய்து கொள்ள வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். இறந்து போனவரை மூன்று பொருட்கள் பின்தொடர்ந்து செல்கின்றன. (அவற்றில்) இரண்டு திரும்பி விடுகின்றன. ஒன்று மட்டுமே அவருடன் தங்கி விடுகிறது. அவரை அவருடைய குடும்பமும், செல்வமும் அவர் செய்த பாவங் களும் பின் தொடர்ந்து செய்கின்றன. (அவற்றில்) அவருடைய குடும்பமும், செல்வமும் திரும்பி விடுகின்றன. அவருடைய செயல்கள் மட்டுமே அவருடன் தங்கி விடும்.

அறிவிப்பவர் : அனஸ் (ரலி)
நூல் : புகாரி (6514)

குறிப்பாக இறந்த பிறகும் நன்மைகளைப் பெற்றுத் தரக்கூடிய நல்லறங்களைச் செய்து கொள்ள வேண்டும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். மனிதன் இறந்து விட்டால் அவனுடைய மூன்று செயல் களைத் தவிர மற்ற அனைத்தும் நின்று விடுகின்றன. 1. நிலையான அறக்கொடை. 2. பயன்பெறப்படும் கல்வி. 3. அவனுக்காகப் பிரார்த்திக்கும் (அவனுடைய) நல்ல குழந்தை.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)
நூல் : முஸ்லிம் (3084)

## சிரமங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்

மறுமையில் நல்ல பலன்களை அடைய வேண்டும் என்பதற்காக இந்த உலகத்தில் அல்லாஹ் நமக்கு நோய்களையும், சிரமங்களையும் தருகிறான். இதை சகித்துக் கொள்ளாதவர்கள் இறைவனை ஏசி நன்றி கெட்ட தனமாக நடந்து கொள்கிறார்கள். இது தவறாகும்.

எவ்வளவு சிரமங்கள் வந்தாலும் அதைப் பொறுத்துக் கொண்டு மருத்துவம் செய்பவர்களுக்கு இறைவனின் அன்பும் அருளும் கிடைக்கிறது. வயிற்று வலியால் இறந்தவர்கள் கப்ரில் வேதனை செய்யப்பட மாட்டார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

சுலைமான் பின் ஸுரத் மற்றும் ஹாலித் பின் உர்ஃபுதா ஆகியோருடன் நான் அமர்ந்திருந்தேன். வயிற்று நோயால் இறந்து போன ஒருவரை (புதைப்பதற்காக) பின்தொடர்ந்து செல்ல வேண்டும் என்று அவ்விருவரும் எண்ணிக் கொண்டிருந்தார்கள். அப்போது வயிற்று நோயால் இறந்து விடுபவர் மண்ணறையில் வேதனை செய்யப்பட மாட்டார் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள். இல்லையா? என்று அவர்களில் ஒருவர் இன்னொருவரிடம் கேட்டார். அதற்கு ஆம் என்று இன்னொருவர் பதிலளித்தார்.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் யஸார் (ரலி)
நூல் : அஹ்மத் (17591)

## அல்லாஹ்வின் பாதையில் உயிர் தியாகம் செய்தல்

அல்லாஹ்விற்காக உயிர் தியாகம் செய்தவர்களுக்கு தனிச் சிறப்பு மார்க்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மரணத்திற்குப் பிறகு சந்தோஷமான வாழ்வு இவர்களுக்குக் கிடைக்கிறது. மண்ணறை வேதனையிலிருந்து இவர்கள் பாதுகாக்கப்படுகிறார்கள்.

அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்டோரை இறந்தோர் என எண்ணாதீர்கள்! மாறாக அவர்கள் தம் இறைவனிடம் உயிருடன் உள்ளனர்; உணவளிக்கப்படுகின்றனர். அவர்களுக்கு அல்லாஹ் வழங்கும் அருளை எண்ணி மகிழ்கின்றனர். அவர்களுடன் (இதுவரை) சேராமல் பின்னால் (உயிர் தியாகம் செய்து) வரவிருப்போருக்கு எந்த பயமும் இல்லை. அவர்கள் கவலைப்படவும் மாட்டார்கள் என்பதை எண்ணி மகிழ்ச்சியுடன் உள்ளனர்.

அல்குர்ஆன் (3 : 169)

இந்த வசனத்திற்குரிய விளக்கத்தை நபி (ஸல்) அவர்கள் நமக்குத் தெளிவுபடுத்தியுள்ளார்கள். அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்டவர்கள் எவ்வளவு இன்பமாக வாழ்கிறார்கள் என்பதை பின்வரும் சம்பவத்தின் மூலம் அறியலாம்.

நாங்கள் அப்துல்லாஹ்பின் மஸ்ஊத் (ரலி) அவர்களிடம், ''(நபியே!) அல்லாஹ்வின் வழியில் கொல்லப்பட்டோரை இறந்தோர் என நீர் எண்ண வேண்டாம். மாறாக, (அவர்கள்) உயிருடன் உள்ளனர்; தம் இறைவனிடம் (நெருக்கமாக) உள்ளனர்; உணவளிக்கப் பெறுகின்றனர்'' (3:169) எனும் இந்த இறைவசனத்தைப் பற்றிக் கேட்டோம். அதற்கு அவர்கள் கூறினார்கள். தெரிந்து கொள்க. இந்த வசனத்தைப் பற்றி முன்பே நாங்கள் (நபியவர்களிடம்) கேட்டு விட்டோம்.

அப்போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அவர்களின் உயிர்கள் பச்சை நிறப் பறவைகளின் வயிறுகளில் (செலுத்தப் பட்டு) இருக்கும். அவற்றுக்கென இறை அரியணையின் (அர்ஷின்) கீழ் மாட்டப்பட்டுள்ள கண்ணாடிக் கூண்டுகள் இருக்கும். அவை சொர்க்கத்தில் விரும்பியவாறு உண்டு களித்து விட்டு பின்பு அந்தக் கூண்டுக்குள் வந்து அடையும்.

அப்போது அவர்களின் இறைவன் அவர்களிடம் ஒரு முறை தோன்றி, ''நீங்கள் எதையேனும் ஆசைப்படுகிறீர்களா?'' என்று கேட்பான். அதற்கு அவர்கள், ''நாங்கள் ஆசைப்படுவ

தற்கு என்ன உள்ளது? நாங்கள் தாம் சொர்க்கத்தில் விரும்பிய வாறு உண்டு களித்துக் கொண்டிருக்கிறோமே!'' என்று கூறுவர்.

இவ்வாறே மூன்றுமுறை (கேள்வியும் பதிலும்) நடை பெறுகிறது. எதையேனும் கேட்காமல் நாம் விடப்பட மாட்டோம் என்பதை அவர்கள் காணும் போது, ''இறைவா! எங்கள் உயிர்களை எங்கள் உடல்களுக்குள் திரும்பவும் செலுத்துவாயாக! நாங்கள் உனது பாதையில் மீண்டும் கொல்லப்பட வேண்டும்'' என்று கூறுவர். அவர்களுக்கு (இதைத் தவிர) வேறெந்தத் தேவையும் இல்லையென்பதை இறைவன் காணும் போது, அவர்கள் (அதே நிலையில்) விடப்படுவார்கள்.

அறிவிப்பவர் : மஸ்ரூக் (ரலி)
நூல் : முஸ்லிம் (3834)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஷஹீதிற்கு (உயிர் தியாகி) ஆறு சிறப்புகள் வழங்கப்படுகிறது. அவருடைய இரத்தத்தில் முதல் சொட்டு (பூமியில் விழும் போதே) அவரது பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுகிறது. சொர்க்கத்தில் அவருடைய இருப்பிடம் அவருக்குக் காட்டப்படுகிறது. ஹூருல் ஈன்களை அவருக்கு மணமுடித்து வைக்கப்படும். மாபெரும் திடுக்கத்திலிருந்து அவர் பாதுகாக்கப்படுகிறார். மண்ணறை வேதனையிலிருந்தும் அவர் பாதுகாக்கப்படு கிறார். ஈமான் என்ற ஆடை அவருக்கு அணியப்படுகிறது.

அறிவிப்பவர் : கைஸ் ஜுதாமீ (ரலி)
நூல் : அஹ்மத் (17115)

அல்லாஹ்வின் வழியில் உயிர் தியாகம் செய்தவர்கள் உலகி லேயே சிரமங்களை அனுபவித்து விட்டதால் மண்ணறையில் அவர் கள் விசாரணை செய்யப்பட மாட்டார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதரே! உயிர் தியாகியைத் தவிர மற்ற இறை நம்பிக்கையாளர்கள் மண்ணறைகளில் (விசாரணை யின் மூலம்) சோதனை செய்யப்படுகிறார்களே ஏன்? என்று ஒரு மனிதர் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் (போரின் போது) மின்னுகின்ற வாட்கள் ஷஹீதுடைய தலையில் ஏற்படுத்திய சோதனையே போதுமானமாகும். (எனவே அவர் மண்ணறையில் சோதனை செய்யப்பட மாட்டார்) என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

நூல் : நஸயீ (2026)

## உயிர் தியாகம் செய்யாதவருக்கும் ஷஹீதுடைய அந்தஸ்து

அல்லாஹ்வின் பாதையில் போரிட்டுக் கொல்லப்பட வேண்டிய நிலை வந்தால் உயிரை தியாகம் செய்வதற்கு நாம் தயாராக இருக்க வேண்டும். அல்லாஹ்விற்காக போரிட்டு மரணிக்கும் பாக்கியத்தை மனப்பூர்வமாக இறைவனிடம் கேட்க வேண்டும்.

இதனால் போரிட்டு இறக்காமல் சாதாரணமாக இறந்தாலும் கூட அல்லாஹ்வின் பாதையில் போரிட்டுக் கொல்லப்பட்டவர் களுக்குக் கிடைக்கும் சிறப்புகள் நமக்குக் கிடைக்கும். விசாரணை இல்லாமல் மண்ணறை வேதனையிலிருந்து ஷஹீதுகள் பாதுகாக்கப் படுவதைப் போல் நாமும் பாதுகாக்கப்படுவோம்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யார் உண்மையான மனதுடன் இறைவழியில் வீரமரணம் அடைவதை வேண்டுகிறாரோ, அவர் அ(தற்குரிய அந்தஸ்)தை அடைந்து கொள்வார். அவரை வீரமரணம் தழுவாவிட்டாலும் சரியே!

அறிவிப்பவர் : அனஸ் பின் மாலிக் (ரலி)
நூல் : முஸ்லிம் (3869)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யார் உண்மையான மன துடன் இறைவனிடம் வீரமரணத்தை வேண்டுவாரோ, அவரை உயிர் தியாகிகள் தகுதிக்கு அல்லாஹ் உயர்த்துவான். அவர் தமது படுக்கையில் (இயற்கை) மரணமடைந்தாலும் சரியே!

அறிவிப்பவர் : சஹ்ல் பின் ஹுனைஃப் (ரஹ்)
நூல் : முஸ்லிம் (3870)

## இறந்தவருக்காக உயிருள்ளவர்கள் செய்ய வேண்டியவை

இறந்தவர்களுக்காக உயிருள்ளவர்கள் சில நன்மையான காரியங்களைச் செய்வதால் இறந்தவருக்கு நன்மை ஏற்படுகிறது. அந்த நன்மையான காரியங்கள் எதுஎதுவென்று நபி (ஸல்) அவர்கள் நமக்குத் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.நபியவர்கள் காட்டித் தந்த விஷயங்களைத் தாண்டி நாமாக எதையும் செய்யக் கூடாது.

### இறந்தவருக்காக தர்மம் செய்யலாம்

இறந்தவருக்காக உயிருடன் இருப்பவர்கள் தர்மம் செய்தால் அதனால் இறந்தவர் பலனடைவார். இவ்வாறு செய்வதற்கு நபிமொழிகளில் ஆதாரம் இருக்கிறது.

ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ''என் தாய் திடீரென இறந்து விட்டார். அவர் அப்போது பேச முடிந்திருந் தால் நல்லறம் (தான தர்மம்) செய்திப்பார். எனவே அவருக்காக நான் தர்மம் செய்தால் அதற்கான நன்மை அவரைச் சேருமா?'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் ''ஆம்'' என்றார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)
நூல் : புகாரி (1388)

சஅத் பின் அபாதா அவர்கள் வெளியே சென்றிருந்த போது அவருடைய தாயார் இறந்து விட்டார். அப்போது அவர் நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! என் தாயார் நான் வெளியே சென்றிருந்த போது மரணமடைந்து விட்டார். நான் அவர் சார்பாக தர்மம் ஏதும் செய்தால் அது அவருக்குப் பயனளிக்குமா?" என்று கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "ஆம் (பயனளிக்கும்)" என்று பதிலளித்தார்கள். இதைக் கேட்ட சஅத் (ரலி) அவர்கள், "நான் எனது மிக்ராஃப் எனும் தோட்டத்தை என் தாயார் சார்பாக தர்மம் செய்து விட்டேன். அதற்கு தங்களை சாட்சியாக்குகிறேன்" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)
நூல் : புகாரி (2756)

## இறந்தவருக்காக பிரார்த்தனை செய்யலாம்

மரணித்தவர் விசாரணையில் வெற்றி பெற வேண்டும் என்பதற்காகவும், நல்ல வாழ்க்கை அவருக்கு அமைய வேண்டும் என்பதற்காகவும் அல்லாஹ்விடம் இறந்தவருக்காக பிரார்த்தனை செய்யுமாறு நபி (ஸல்) அவர்கள் நமக்குக் கட்டளையிட்டுள்ளார்கள்.

மரணித்தவரை அடக்கி முடித்தவுடன் அதனருகில் நின்று கொண்டு நபி (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறுவார்கள். (இறந்து விட்ட) உங்களுடைய சகோதரனுக்காக பாவ மன்னிப்பு தேடுங்கள். (விசாரிக்கப்படும் போது) உறுதியாக இருக்க வேண்டும் என்று அவருக்காக வேண்டுங்கள். ஏனென்றால் இப்போது அவர் விசாரணை செய்யப்பட்டுக் கொண்டிருக்கிறார்.

அறிவிப்பவர் : உஸ்மான் பின் அஃப்பான் (ரலி)
நூல் : அபூதாவூத் (2804)

நபி (ஸல்) அவர்கள் ஒரு ஜனாஸாத் தொழுகையில் ''அல்லாஹும் மஃக்ஃபிர் லஹு, வர்ஹம்ஹு, வஉஃபு அன்ஹு, வ ஆஃபிஹி, வ அக்ரிம் நுஸுலஹு, வ வஸ்ஸிஃ முத்கலஹு, வஃக்சில்ஹு பி மாயின் வ ஸல்ஜின் வ பரதின், வ நக்கிஹி மினல் கத்தாயா கமா யுனக்கஸ் ஸல்புல் அப்யளு மினத் தனஸ், வ அப்தில்ஹு தாரன் கைரம் மின் தாரிஹி, வ அஹ்லன் கைரம் மின் அஹ்லிஹி, வ ஸவ்ஜன் கைரம் மின் ஸவ்ஜிஹி, வ கிஹி ஃபித்னத்தல் கப்றி வ அதாபந் நார்'' என்று ஓதுவதை நான் செவியுற்றேன்.

(பொருள் : இறைவா! இவருக்கு மன்னிப்பு அளிப்பாயாக! கருணை புரிவாயாக! இவருடைய பாவங்களை மாய்த்து இவரைக் காப்பாயாக! இவருக்கு நல்கப்படும் விருந்தை நல்ல தாக்குவாயாக! இவர் புகுமிடத்தை (கப்றை) விசாலமாக்குவா யாக! இவருடைய குற்றங்குறைகளிலிருந்து இவரை நீராலும், பனிக்கட்டியாலும், ஆலங்கட்டியாலும் கழுவி அழுக்கிலிருந்து வெண்மையான ஆடை தூய்மைப்படுத்து வதைப் போன்று தூய்மையாக்குவாயாக! மேலும் இங்குள்ள வீட்டை விட சிறந்த வீட்டையும், இங்குள்ள குடும்பத்தை விட சிறந்த குடும்பத்தையும், இங்குள்ள துணையை விடச் சிறந்த துணையையும் இவருக்கு வழங்குவாயாக! மண்ணறை யின் வேதனையிலிருந்தும், நரக நெருப்பின் வேதனையி லிருந்தும் இவரைக் காத்தருள்வாயாக!)

அந்தப் பிரேதத்திற்காக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பிரார்த்தித்ததைப் பார்த்து விட்டு, அது நானாக இருந்திருந்தால் நன்றாகயிருந்திருக்குமே என்று நான் ஆசைப்பட்டேன்.

அறிவிப்பவர் : அவ்ஃப் பின் மாலிக் (ரலி)

நூல் : முஸ்லிம் (1757)

# இறந்தவருக்காக கடமையான நோன்பை நோற்றல்

இறந்தவர் மீது கடமையான நோன்பு அல்லது நேர்ச்சை செய்த ஏதும் நிறைவேற்றப்படாமல் இருந்தால் அதை அவரது வாரிசுகள் நோற்கலாம். அவ்வாறு நோற்றால் இறந்தவர் மீதிருந்த சுமை நீங்கிவிடுகிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: களாவான நோன்புள்ள நிலையில் ஒருவர் இறந்துவிட்டால் அவர் சார்பாக அவருடைய பொறுப்பாளர் நோன்பு நோற்பார்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : புகாரி (1952)

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ''அல்லாஹ்வின் தூதரே! என் தாயாருக்கு ஒரு மாத நோன்பு கடமையாகியிருந்த நிலையில் இறந்து விட்டார். அவர் சார்பாக அதை நான் நிறைவேற்றலாமா?'' என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், ''ஆம்! அல்லாஹ்வின் கடன் நிறைவேற்றப்படுவதற்கு அதிகத் தகுதி படைத்தது'' என்றார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் : புகாரி (1953)

# இறந்தவர் சார்பில் கடமையான ஹஜ்ஜை நிறைவேற்றுதல்

இறந்தவர் மீது ஹஜ் கடமையாகி இருந்து அதைச் செய்யாமல் அவர் மரணித்தால் அவர் சார்பில் அவரது வாரிசுகள் ஹஜ்ஜை நிறைவேற்றலாம். அது போல் இறந்தவர் ஹஜ் செய்வதாக நேர்ச்சை செய்திருந்தால் அது கடமையாகி விடுகிறது. எனவே இறந்தவர் நேர்ச்சை செய்த ஹஜ்ஜை அவரது வாரிசுகள் நிறைவேற்றலாம். இதனால் இறந்தவர் மீதிருந்த ஹஜ் கடமை நீங்கி விடுகிறது.

'கஸ்அம்' எனும் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பெண் நபி (ஸல்) அவர்களை நோக்கி, ''அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக அல்லாஹ் தன் அடியார்களின் மீது ஹஜ்ஜை கடமையாக்கியுள்ளான். ஆனால் எனது வயது முதிர்ந்த தந்தையால் பயணிக்க முடியாது. எனவே நான் அவருக்குப் பகரமாக ஹஜ் செய்யலாமா?'' எனக் கேட்டார். நபி (ஸல்) அவர்கள், ''ஆம்!'' என்றார்கள். இது 'விடைபெறும்' ஹஜ்ஜின் போது நிகழ்ந்தது.

அறிவிப்பவர் : அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி)
நூல் : புகாரி (1513)

(உக்பா பின் ஆமிர் என்றழைக்கட்ட) ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, ''(அல்லாஹ்வின் தூதரே!) என் சகோதரி ஹஜ் செய்வதாக நேர்ந்து கொண்டு (அதை நிறைவேற்றாமல்) இறந்து விட்டார்'' என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், ''உன் சகோதரிக்கு கடன் இருந்தால் அதை நீதானே நிறைவேற்றுவாய்?'' எனக் கேட்டார்கள். அவர், ''ஆம் (நான்தான் நிறைவேற்றுவேன்)'' என்றார். நபி (ஸல்) அவர்கள், ''அல்லாஹ்வின் கடனை நிறைவேற்று! கடன் நிறைவேற்றப்பட அவனே அதிக உரிமை படைத்தவன்'' என்றார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)
நூல் : புகாரி (6699)

## இறந்தவர் விட்டுச் சென்ற கடனை நிறைவேற்றுதல்

ஒருவர் கடன்பட்டவராக மரணித்தால் அதை மற்றவர்கள் அடைக்கலாம். அவ்வாறு அடைத்து விட்டால் கடன் கொடுத்தவர் மறுமைநாளில் வழக்குத் தொடர முடியாது. எனவே மரணித்தவரின் நல்லறங்கள் அவருக்கே செல்ல வேண்டும் என்று வாரிசுகள் விரும்பினால் அவர்பட்ட கடன்களை அடைப்பதில் அதிக கவனம் செலுத்த வேண்டும்.

என் தந்தை உஹுதுப் போரின் போது கொல்லப்பட்டு விட்டார்கள். அவர்கள் ஆறு பெண் மக்களை விட்டுச் சென்றார்கள். தம் மீது கடனையும் விட்டுச் சென்றார்கள். பேரீச்சம்பழம் பரிக்கும் காலம் வந்தபோது நான் அல்லாஹ்வின் தூதரிடம் சென்று, "அல்லாஹ்வின் தூதரே! என் தந்தை உஹுதுப் போரின் போது கொல்லப்பட்டு விட்டதையும், தம் மீது கடன் விட்டுச் சென்றிருப்பதையும் தாங்கள் அறிவீர்கள். கடன்காரர்கள் தங்களைப் பார்க்க வேண்டுமாறு நான் விரும்புகிறேன்" என்று கூறினேன். நபி (ஸல்) அவர்கள், "நீ போய் ஒவ்வொரு (வகைப்) பேரீச்சம்பழத்தையும் களத்தில் அதனதன் இடத்தில் குவித்து வை" என்று கூறினார்கள். நான் அவ்வாறே செய்தேன். பிறகு நபியவர்களை அழைத்தேன். கடன்காரர்கள் நபி (ஸல்) அவர்களைக் கண்டவுடன் என்னிடம் இன்னும் வற்புறுத்தலாயினர். அவர்கள் (இப்படிச்) செய்ததைக் கண்ட நபி (ஸல்) அவர்கள் அவற்றில் மிகவும் பெரிய குவியலை மூன்று முறை சுற்றி வந்து அதன் அருகே உட்கார்ந்து கொண்டார்கள். பிறகு, "உன் கடன்காரர்களைக் கூப்பிடு" என்று சொன்னார்கள். (அவர்கள் வந்ததும்) அவர்களுக்கு நிறைவேற்றித் தரும் வரை அளந்து கொடுத்துக் கொண்டே இருந்தார்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! "ஒரேஒரு பேரீச்சம்பழத்தைக் கூட எடுத்துக் கொண்டு என் சகோதரிகளிடம் திரும்பிச் செல்ல முடியாது என்ற நிலை ஏற்பட்டாலும் (பரவாயில்லை.) அல்லாஹ் என் தந்தையின் கடன் சுமையைத் தீர்த்து வைத்தால் போதும்" என்று நான் இருந்தேன். அல்லாஹ்வின் மீதாணையாக! குவியல்கள் அனைத்தும் அப்படியே எஞ்சி விட்டன. குறையாமல் இருந்தன. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அமர்ந்திருந்த குவியலை நான் பார்த்துக் கொண்டே இருந்தேன். அதிலிருந்து ஒரேஒரு பேரீச்சம் பழம் கூட குறையாததைப் போல் அது அப்படியே இருந்தது.

அறிவிப்பவர் : ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி)

நூல் : புகாரி (2781)

(உக்பா பின் ஆமிர் என்றழைக்கட்ட) ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, ''(அல்லாஹ்வின் தூதரே!) என் சகோதரி ஹஜ் செய்வதாக நேர்ந்து கொண்டு (அதை நிறை வேற்றாமல்) இறந்து விட்டார்'' என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், ''உன் சகோதரிக்கு கடன் இருந்தால் அதை நீதானே நிறைவேற்றுவாய்?'' எனக் கேட்டார்கள். அவர், ''ஆம் (நான்தான் நிறைவேற்றுவேன்)'' என்றார். நபி (ஸல்) அவர்கள், ''அல்லாஹ்வின் கடனை நிறைவேற்று! கடன் நிறைவேற்றப்பட அவனே அதிக உரிமை படைத்தவன்'' என்றார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் : புகாரி (6699)

மேலுற்ற விஷயங்களை இறந்தவருக்காக அவரது உறவினர் கள் செய்வதால் இறந்தவருக்கு சிறந்த மண்ணறை வாழ்வு அமையலாம்.

# தவறான நம்பிக்கைகள்

## கப்ரில் உள்ளவர்கள் செவியேற்பார்களா?

உயிருள்ளவர்கள் பேசுவதை இறந்து விட்டவர்கள் செவியேற் பார்கள் என பலர் தவறாக எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதனால் தங்களுடைய தேவைகளை இறந்தவர்களிடத்தில் முறையிடுவதன் மூலம் இணைவைப்பு என்ற கொடிய பாவத்தை செய்து கொண்டிருக்கிறார்கள்.

உலகத்தில் நடக்கின்ற எந்த ஒரு நிகழ்வையும் பார்க்கவோ, கேட்கவோ இறந்தவர்களால் முடியாது என்று திருக்குர்ஆன் கூறுகிறது. எனவே அனைத்தையும் செவியேற்கின்ற வல்ல இறைவனிடம் மட்டும் நம்முடைய தேவைகளை முறையிட வேண்டும்.

நீர் இறந்தோரை செவியேற்கச் செய்ய முடியாது!

அல்குர்ஆன் (27 : 80)

உயிருடன் உள்ளோரும், இறந்தோரும் சமமாக மாட்டார்கள். தான் நாடியோரை அல்லாஹ் செவியேற்கச் செய்கிறான். மண்ணறைகளில் உள்ளவர்கள் நீர் செவியேற்கச் செய்பவராக இல்லை.

அல்குர்ஆன் (35 : 22)

நீங்கள் அவர்களை (இறந்தவர்களை) அழைத்தால் உங்கள் அழைப்பை அவர்கள் செவியுறமாட்டார்கள். செவியேற்றார்கள் என்று வைத்துக் கொண்டாலும் உங்களுக்குப் பதில் தரமாட்டார்கள். கியாமத்நாளில் நீங்கள் இணை கற்பித்ததை அவர்கள் மறுத்து விடுவார்கள். நன்கறிந்தவனைப் போல் உமக்கு எவரும் அறிவிக்க முடியாது.

அல்குர்ஆன் (35 : 14)

செவியேற்பவர்களே பதிலளிக்க முடியும். இறந்தோரை அல்லாஹ் (மறுமை நாளில் தான்) உயிர்ப்பிப்பான். பின்னர் அவனிடமே அவர்கள் கொண்டு செல்லப்படுவார்கள்.

அல்குர்ஆன் (6 : 36)

அல்லாஹ்வையன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள் உங்களைப் போன்ற அடிமைகளே. நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் அவர்களை அழைத்துப் பாருங்கள்! அவர்கள் உங்களுக்கு பதில் தரட்டும்!

அல்குர்ஆன் (7 : 194)

## கப்ரில் உள்ளவர்கள் உதவி செய்வார்களா?

இறந்தவர்கள் நல்லவர்களாக இருந்தால் மறுமை நாள் வரும் வரை மண்ணறையில் அவர்கள் நிம்மதியாக உறங்குவார்கள். அவர்களுக்கும், பூமியில் உள்ளவர்களுக்கும் மத்தியில் எந்த விதமான தொடர்பும் இருக்காது. இறந்தவர்களால் உயிருள்ளவர்களுக்கு எந்தத் தொடர்பும் இருக்காது.

அவனன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள் உங்களுக்கு உதவிட இயலாது. தமக்கே அவர்கள் உதவ முடியாது.

அல்குர்ஆன் (7 : 197)

மனிதர்களே! உங்களுக்கு ஓர் உதாரணம் கூறப்படு கிறது. அதைச் செவிதாழ்த்திக் கொள்ளுங்கள்! அல்லாஹ் வையன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள் அனைவரும் ஒன்று திரண்டாலும் ஓர் ஈயைக் கூட படைக்க முடியாது. ஈ அவர்களிடமிருந்து எதையேனும் பறித்துக் கொண்டால் அதை அந்த ஈயிடமிருந்து அவர்களால் மீட்க முடியாது. தேடுவோனும், தேடப்படுவோனும் பலவீனமாக இருக்கிறார்கள்.

அல்குர்ஆன் (22 : 73)

உங்கள் இறைவன் அவனுக்கே அதிகாரம். அவனன்றி நீங்கள் யாரை அழைக்கிறீர்களோ அவர்கள் அணுவளவும் அதிகாரம் படைத்தவர்களல்லர்.

அல்குர்ஆன் (35 : 13)

(மண்ணறையில் நல்லடியார்களிடம் விசாரணை முடிந்தவுடன்) உறங்குங்கள் என்று அவரிடம் சொல்லப்படும். அதற்கு அவர் எனது குடும்பத்தாரிடம் திரும்பிச் சென்று (எனக்குக் கிடைத்த நல்வாழ்க்கையை) அவர்களிடம் கூறி விட்டு வருகிறேன் என்று கூறுவார். அதற்கு இரு வானவரும் ''அல்லாஹ் உன்னை இந்த இடத்திலிருந்து எழுப்பும் வரை புது மாப்பிள்ளை உறங்குவதைப் போல் உறங்கு. புது மாப்பிள்ளையை அவருக்குப் பிரியமானவரைத் தவிர வேறு யாரும் எழுப்ப மாட்டார்கள்'' என்று கூறிவிடுவார்கள்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : திர்மிதி (991)

# வெள்ளிக்கிழமையன்று மரணித்தல்

வெள்ளிக்கிழமையன்று மரணித்தால் மரண வேதனை கிடையாது என்று சிலர் நம்புகிறார்கள். இந்தக் கருத்தில் சில நபி மொழிகளும் பதிவாகியுள்ளன. அவை அனைத்தும் பலவீனமானது.

யார் வெள்ளிக்கிழமை மரணிக்கிறாரோ அவர் கப்ரு வேதனையி லிருந்து காக்கப்படுவார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூயஃலா எனும் நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

இதை யஸீத் அர்ரகாஷீ என்பவர் அறிவித்துள்ளார். இவர் பலவீனமானவர்.

இதுபோன்ற கருத்தில் மற்றொரு ஹதீஹ் திர்மிதி **994** வது ஹதீஸாக பதிவு செய்யப்பட்டுள்ளது. இது பலவீனமானது என்பதை இமாம் திர்மிதீ அவர்களே அந்த ஹதீஸுக்குக் கீழே தக்க சான்று களுடன் விளக்கியுள்ளார்.

இதே கருத்தில் அஹ்மத் நூலில் இரண்டு ஹதீஸ்கள் உள்ளன. **6294** வது ஹதீஸை ஹிஷாம் பின் ஸஅது என்பவர் அறிவிக்கிறார். இவர் பலவீனமானவர்.

**6359** வது ஹதீஸை முஆவியா பின் ஸயீத் என்பவர் அறிவிக்கிறார். இவர் யார் என்று அறியப்படாதவர்.

எனவே இந்தக் கருத்தில் அமைந்த ஹதீஸ்கள் பலவீனமான தாக உள்ளதால் வெள்ளிக்கிழமை மரணித்தால் மண்ணறை வேதனையிலிருந்து பாதுகாப்புக் கிடைக்கும் என்று நம்புவது தவறாகும்.

ஒரு மனிதர் எந்த நாளில் எந்த மாதத்தில் எந்த வயதில் எந்த இடத்தில் மரணிக்கிறார் என்பதற்கு இஸ்லாத்தில் எந்த முக்கியத்துவமும் இல்லை.

اللغة التاميلية

# المسابقة الثقافية
# الرمضانية لعام ١٤٣٤ هـ
# للجاليات

## 15வது ரமழான் வினா விடைப் போட்டி 1434-2013
## நிபந்தனைகள்

1-எல்லா வினாக்களுக்கும் **'குர்ஆன் ஹதீஸ் ஒளியில் மண்ணறை வாழ்கை'** என்ற நூலிலிருந்து பதில் எழுத வேண்டும்.

2 -விடைத் தாள்களை ரப்வா தஃவா நிலையத்தில் ஒப்படைக்க வேண்டும் அல்லது தபால் மூலம் 29-11-1434ஹி - 05-10-2013 ம் தேதிக்குமுன் அனுப்பி வைக்கப்பட வேண்டும். -தபால் பெட்டி எண் 29465 ரியாத் 11457, இணைய தளம் jaliyat@islamhouse.com

3-பெயர் இகாமாஃ, கடவுச்சீட்டில் இருப்பது போன்று எழுதப்படவேண்டும், மாறாக பெயரில் மாற்றம் ஏற்படின் பரிசு வழங்கப்பட மாட்டாது.
4-மொழி, முகவரி, தொலைபேசி எண், இணையதள முகவரி இருப்பின் அனைத்தும் எழுதப்பட வேண்டும்.

5-1435 முஹர்ரம் மாத இறுதியில் வெற்றி பெறுவோர்களின் பெயர்கள் தஃவா நிலையத்திலும், (www.islamhouse.com) என்ற இணையதளத்திலும் அறிவிக்கப்படும். மேலும் பரிசு வழங்கும் நிகழ்ச்சி பற்றியும் பின்னர் தொலைபேசி மூலம் அறிவிக்கப்படும்.

6-விடைகளை வினாத்தாளில் எழுதக் கூடாது.
7-விடைத்தாளின் மேற்பகுதியில் தனது மொழியைக் குறிப்பிட வேண்டும்

8-மோசடி செய்வது மார்க்கத்தில் ஹராமாகும், அது ஒரு போதும் அனுமதிக்கப்படமாட்டாது. ஒரேவிதமான விடைத்தாள்கள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

9-(1435) ஸபர் மாத இறுதியில் பரிசுகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும். இந்த நாளுக்குப் பிறகு எக்காரணம் கொண்டும் பரிசுகள் வழங்கப்படமாட்டாது.

10-போட்டியாளர்கள் 10 வயதைத் தாண்டியவர்களாக இருக்க வேண்டும்.

## பரிசுகள்

1- முதல் பரிசு 1500 ரியால்.

2- இரண்டாவது பரிசு 1250 ரியால்.

3-மூன்றாம் பரிசு 1000 ரியால்.

4-நான்கு முதல் பத்து வரை 300 ரியால்.

5-பதினொன்று முதல் இருபது வரை 200 ரியால்.

6-இருபத்தி ஒன்று முதல் முப்பது வரை 100 ரியால்.

# المسابقة الثقافية الرمضانية لعام ١٤٣٤ هـ للجاليات

## ரமழான் வினாவிடைப் போட்டி 1434
## கேள்விகள்

1. முஆவியா (ரலி) அவர்களின் சகோதரி ஒருவர் நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆவார். அவர்களின் பெயர் என்ன? அவர்கள் கேட்ட துஆ யாது?

2. உங்களில் ஒருவர் இறந்து விட்டால் அவர் தங்குமிடம் அவருக்குக் காலையிலும் மாலையிலும் எடுத்துக்காட்டப்படும் என்பதனை ஆதாரத்துடன் தருக.

3. 'எனது தந்தை ஆறு பெண்மக்களை விட்டுச் சென்றார்கள்' எனக் கூறிய நபித்தோழர் யார்? ஆதாரத்துடன் கூறுக.

4. 'மித்அம்' எனப்படும் அடிமை யாரால் யாருக்கு எச்சந்தர்ப்பத்தில் வழங்கப்பட்டது? ஆதாரம் கூறுக.

5. 'ரிஅல்' , 'தக்வான்' , 'உஸய்யா' ஆகிய குலத்தினருக்கு கேடு நேர நபி (ஸல்) அவர்கள் எச்சந்தர்ப்பத்தில் பிரார்த்தித்தார்கள்? ஆதாரம் தருக

6. நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ் (எதிரிகளுடைய) வீடுகளையும் புதைகுழிகளையும் நெருப்பால் நிரப்புவானாக என எச்சந்தர்ப்பத்தில் பிரார்த்தித்தார்கள்? ஆதாரம் கூறுக.

7. ஜனாஸாத் தொழுகையில் கூறும் துஆவை ஆதாரத்துடன் தருக.

8. 'அவர்களின் உயிர்கள் பச்சை நிறப்பறவைகளின்...........' என நபி (ஸல்) அவர்கள் யாரை வர்ணித்தார்கள்?

9. ஷஹீதுக்கு வழங்கப்படும் சிறப்புக்களை ஆதாரத்துடன் கூறவும்.

10. 'யார் அல்லாஹ்வை சந்திக்க விரும்புகிறாரோ அவரைச் சந்திக்க அல்லாஹ்வும் விரும்புகிறான்' என்ற நபிமொழியைப் பூர்த்தி செய்யவும்.

# பொது நிபந்தனைகள்

1-போட்டியாளர்கள் தமக்காக வரையறுக்கப்பட்ட பகுதிகளில் மாத்திரமே நுழைய வேண்டும், ஏனைய பகுதிகளில் கலந்து கொள்ள முடியாது.

2- ஆண்கள் ரப்வா தஃவா நிலையத்திற்கு அருகிலிருக்கும் ஹு வைரீனி மஸ்ஜிதில் ரமழான் 16,17 ஆகிய தினங்களில் தராவீஹ் தொழுகையைத் தொடர்ந்து நள்ளிரவு 12:00 மணி வரையும்,மற்றும் துல்கஃதா மாதம் 10 ம் திகதிகளில் ரப்வா தஃவா நிலையத்தில் மஃரிப் தொழுகையை தொடர்ந்து 10:00 வரையும்,மேலும் துல்கஃதா மாதம் 12-13 ம் திகதிகளில் மஃரிப் தொழுகையிருந்து இரவு 10:00 மணிவரை ஜாமிஉல் முன்தஸயிலும் (விஸாராத்)தாம் மனனமிட்டதை ஓதிக் காண்பிக்கலாம்.
பெண்கள் ரப்வா தஃவா நிலையத்திற்கு சமீபத்திலுள்ள 'ஸாதுந் நிதாகைன்' பெண்கள் குர்ஆன் மனனவகுப்பு நடக்குமிடத்தில் ஷவ்வால் மாதம் பிறை 27 ல்(நாட்காட்டியில் உள்ளபடி)அஸர் தொழுகை நிறைவடைந்ததிலிந்து மஃரிப்தொழுகை வரையும்,மேலும் துல்கஃதா மாதம் 10 ம் திகதி மஃரிப் தொழுகையிருந்து இரவு 09:00 மணிவரையும் ஓதிக் காண்பிக்கலாம்,மேலும் துல்கஃதா மாதம்13-14 திகதிகளில் ஆதிகா பாடசாலையிலும் (விஸாராத்),மேலும் துல்கஃதா மாதம் 08-09 திகதிகளில் நூருல்குர்ஆன் பாடசாலையிலும் (விஸாராத்) ஓதிக் காண்பிக்கலாம். குறிப்பிட்ட நேரத்தில் போட்டிக்கு சமூகந்தராதவருக்கு (மீண்டும் போட்டி நடாத்த முடியாமைக்கு) வருந்துகிறோம்.

3- சிறுவர்களும் (அவர்களுக்கு) குறிப்பிட்ட பிரிவுகளுக்கமைய போட்டிகளில் கலந்து கொள்ளலாம்.

4-கலந்து கொள்ளும் அனைவருக்கும் அவர்களை ஊக்குவிக்கும் முகமாக பரிசில்கள் வழங்கப்படும்.

5-போட்டியில் வெற்றிபெற்றவர்களின் பெயர்கள் துல்ஹிஜ்ஜா மாதஇறுதியில் www.islamhouse.com என்ற இணையதளத்தில் அறிவிக்கப்படும். விழா நடைபெறும் இடம், நேரம் பற்றி பின்னர் தொலைபேசி மூலம் அறிவிக்கப்படும்.

6-வெற்றியாளர்கள் விழா நடந்து 10 நாட்களுக்குள் பரிசுகளைப் பெற்றுக் கொள்ள வேண்டும். அதன் பின்னர் எக்காரணத்தைக் கொண்டும் பரிசில்கள் வழங்கப்பட மாட்டாது.

مسابقة

# القرآن الكريم

اللغة التاميلية

## 15வது ரமழான் மாத அல் குர்ஆன் மனனப் போட்டி
## ஹிஜ்ரி 1434ம் ஆண்டு

| போட்டியின் படித்தரங்கள் | மனனமிட வேண்டியவைகள் | ஒவ்வொரு தரப்பினர்களுக்குமான வரையறுக்கப்பட்ட நிபந்தனைகள் |
|---|---|---|
| முதலாம் தரம் (வகுப்பு) | 30 ஜுஸ்உகள், 1 ஆவது ஜுஸ்இல் இருந்து 30ம் ஜுஸ்உ வரை. | இப்பகுதி ஆசிரியர்கள், ஹாபிழ்கள், பல்கலைகழக மாணவர்கள் ஆகியோர்க்கு மட்டுமே. |
| இரண்டாம் தரம் | 10 ஜுஸ்உகள் 21ம் ஜுஸ்உ முதல் 30ம் ஜுஸ்உ வரை. | இப்பகுதி மனனத்தில்மத்தியமானவர்களுக்குரியது. |
| மூன்றாம் தரம் | 4 ஜுஸ்உக்கள் 27ம் ஜுஸ்உ முதல் 30ம் ஜுஸ்உ வரை. | மனனத்தில் ஆரம்பமானவர்களுக்கு. |
| நான்காம் தரம் | 30வது ஜுஸ்உ (ஜுஸ்உ அம்ம). | இப்பகுதி 10 வயதுக்குட்பட்ட சிறார்களுக்கு மாத்திரம் (இதில் ஆண்/பெண் இரு பாலாரும் கலந்து கொள்ளலாம்). |
| ஐந்தாம் தரம் | 20 ஸூராக்கள் ஸூரா 'தீன்' முதல் ஸூரா 'நாஸ்' வரை. மேலும் ஸூரதுல் பாதிஹா | இப்பகுதி புதிதாக இஸ்லாத்தில் இணைந்தவர்களுக்கு மட்டுமே. போட்டி நடைபெறும் போது அவர் புதிய முஸ்லிம் என்பதற்கான அத்தாட்சிப்பத்திரத்தை சமர்ப்பிக்க வேண்டும். |

அரியதோர் சந்தர்பம்:

ரப்வா தஃவா நிலையத்தினால் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள ரமழான் மாத அல்குர்ஆன் போட்டியில் வெற்றி பெரும் ஆண்களுக்கு 25,550 ரியால்களும் பெண்களுக்கு 25,550 ரியால்களுமாக மொத்த தொகையாக 51,100 ரியால்கள் பரிசாக வழங்கப் படவிருக்கின்றன.

| வெற்றியாளர் | முதலாம் தரம் | இரண்டாம் தரம் | மூன்றாம் தரம் | நான்காம் தரம் | ஐந்தாம் தரம் |
|---|---|---|---|---|---|
| (1) | 1500 | 1000 | 700 | 500 | 900 |
| (2) | 1400 | 900 | 600 | 400 | 800 |
| (3) | 1300 | 800 | 500 | 300 | 600 |
| (4) | 1200 | 700 | 400 | 200 | 500 |
| (5) | 1100 | 600 | 300 | 200 | 400 |
| (6) | 1000 | 500 | 200 | 200 | 300 |
| (7) | 900 | 400 | 150 | 150 | 200 |
| (8) | 800 | 300 | 150 | 150 | 100 |
| (9) | 700 | 200 | 100 | 100 | 100 |
| (10) | 600 | 100 | 100 | 100 | 100 |
| மொத்தம் | 10500 | 5500 | 3250 | 2300 | 4000 |

ننشر الإسلام بـ ١٠٠ لغة

100
மொழிகள்னூடாக
இஸ்லாத்தை நாம்
முன் வைக்கிறோம்




# Islamhouse.com

المكتب التعاوني للدعوة وتوعية الجاليات بالربوة

هاتف: ٩٦٦١٤٤٥٤٩٠٠+ فاكس: ٩٦٦١٤٩٧٠١٢٦+ ص ب: ٢٩٤٦٥ الرياض: ١١٤٥٧

ISLAMIC PROPAGATION OFFICE IN RABWAH

P.O.BOX 29465 RIYADH 11457 TEL: +966 1 4454900 FAX: +966 1 4970126

/OfficeRabwah @OfficeRabwah